# திருவள்ளுவமாலையும்

# திருக்குறண்மூலமும்

## நாலடிநானூற்றின்மூலமும்

சென்னைக்கல்விச்சங்கத்ததிபராகிய

## *மேம்பட்ட துரையவர்கள்*

கட்டளையினால்

தமிழ்த்தலைமைப்புலமைத்

## தாண்டவராயமுதலியார்

என்பவராற்பழுதறவாராயப்பட்டு

**இவராலும்**

மாநேசர்

முத்துச்சாமிப்பிள்ளை

என்பவராலும்

கிறீஸ்து ௲௮௱௩௰-ம்.

வருடத்திற்செல்லாநின்ற

சாலிவாகநசகவருடம் ௲௭௱௫௰௨-ல்.

நிகழாநின்ற

கரவருடம்

சர்ச்மிசியோன் அச்சுக்கூடத்தில்

அச்சுப்பதிப்பிக்கப்பட்டன.

சிறப்புப்பாயிரம்.

# திருவள்ளுவமாலை.

---

(அசரீரி)

திருத்தகுதெய்வத்திருவள்ளுவரோ
டுருத்தகுநற்பலகையொக்க விருக்க
வுருத்திரசன்மனென வுரைத்துவானி

லொழுக்கவோவென்றதோர்சொல்.

(நாமகள்)

நாடாமுதனூன்மறைநான்முகனாவிற்
பாடாவிடைப்பாரதம்பகர்ந்தேன் கூடாரை
யெள்ளியவென்றியிலங்கிலைவேன்மாறபின்
வள்ளுவன்வாயதென்வாக்கு. உ

(இறையனார்)

என்றும்புலராதியாணர்நாட்செல்லுகினு
நின்றலர்ந்துதேன்பிலிற்றுநீர்மையதாய்க் குன்றாத
செந்தளிர்க்கற்பகத்தின்றெய்வத்திருமலர்போன்
மன்புலவன்வள்ளுவன்வாய்ச்சொல் ௩

(உக்கிரப்பெருவழுதியார்)

நான்மறையின் மெய்ப்பொருளைமுப்பொருளா நான்முகத்
தோன்
றான்மறைந்துவள்ளுவனாய்த்தந்துரைத்த நூன்முறையை
வந்திக்கசென்னிவாய்வாழ்த்துகநன்னெஞ்சஞ்
சிந்திக்ககேட்கசெவி. ௪

(கபிலர்)

தினையளவுபோதாச்சிறுபுன்னீர்நீண்ட
பனையளவுகாட்டும்படித்தால் மனையளகு
வள்ளைக்குறங்கும் வளநாடவள்ளுவனார்
வெள்ளைக்குறட்பாவிரி. ௫

( பரணர் )

மாலுங்குறளாய்வளர்ந்திரண்டுமாணடியான்
ஞாலமுழுதுமளந்தான்    வாலறிவின்
வள்ளுவருந்தங்குறள் வெண்பாவடியால்வையத்தா
ருள்ளுவதெல்லாமளந்தாரோர்ந்து.    ௬

( நக்கீரர் )

தானேமுழுதுணர்ந்துதண்டமிழின்வெண்குறளா
லானாவறமுதலாவந்நான்கு    மேனோருக்
கூழினுரைத்தாற்குமொண்ணீர்முகிலுக்கும்
வாழியுலகென்னாற்றுமற்று.    ௭

( மாமூலனார் )

அறம்பொருளின்பம்வீடென்னுமந்நான்கின்
திறந்தெரிந்துசெப்பியதேவை    மறந்தேயும்
வள்ளுவனென்பானோர்பேதையவன்வாய்ச்சொற்
கொள்ளாரறிவுடையார்.    ௮

( கல்லாடர் )

ஒன்றேபொருளெனின்வேறென்பவேறெனி
னன்றென்பவாறுசமயத்தார்    நன்றென
வெப்பாலவருமியைபவேவள்ளுவனார்
முப்பால்மொழிந்தமொழி.    ௯

( சீத்தலைச்சாத்தனார். )

மும்மலையுமுந் நாடுமுந் நதியுமுப்பதியு
மும்முரசுமுத்தமிழுமுக்கொடியு முமுடியுந்
தாமுடையமன்னர்தடமுடிமேற் றான்றோ
பாமுறைதேர்வள்ளுவர்முப்பால். ௰

( ௯ )

( மருத்துவன்றாமோதரனார். )

சிந்திநீர்க்கண்டந் தெளிக்குத்தேனளாய்
மோந்தபின்யார்க்குந் தலைக்குத்தில் காந்தி மலைக்
குத்துமால்யானைவள்ளுவர்முப்பாலாற்
றலைக்குத்துத்தீர்வுசாத்தற்கு. ௰௧

( நாகன்றேவனார். )

தாளார்மலர்ப்பொய்கைதாங்குடைவார்தண்ணீரா
வேளாதொழிதல்வியப்பன்று வாளாதா
மப்பாலொருபாவையாய்பவோவள்ளுவனார்
முப்பான்மொழிமூழ்குவார். ௰௨

( அரிசிற்கிழார். )

பார்த்தபொருளெல்லாம்பாரியவேறு
தெரிந்துதிறந்தொறுஞ்சேரச் சுருங்கிய
சொல்லால்விரித்துப்பொருள்விளங்கச்சொல்லுதல்
வல்லாராரர்வள்ளுவரல்லால். ௰௩

( பொன்முடியார். )

சானின்றதொங்கலாய்சாிபனுர் றந்தநூன்
கூறின்றனந்தகுறளென்ப நான்முறையான்
வானின்றுமன்னின்றனந்தேவர்றையமுர்
தாநின்றனந்தகுறள். ௰௪

( கோதமனர். )

ஆற்றலழியுமென்றந்தணர்களைமறையைப்
போற்றியுரைத்தேட்டின்புறத்தெழுதா ரேட்டெழுதி
வல்லுநருமவல்லாருமவள்ளுவனார்முப்பாலிச்
சொல்லிடினுமாற்றல்சோர்வின்று ௰௫

( ௬ )

( நத்தத்தனர். )

ஆயிரத்தமுந்நூற்றுமுப்பதருங்குறளும்
பாயிரத்திநோடுபகர்ந்ததற்பின் போயொருத்தர்
வாய்க்கேட்கநூலுளவோமன்னுதமிழ்ப்புலவ
ராய்க்கேட்கவீற்றிருக்கலாம். ௰௬

( முகையலூர்ச்சிறுகருந்தும்பியார் )

உள்ளுதொறுள்ளுமுருகச்செய்துள்ளத்தை
தெள்ளுதலன்றேசெயற்பால வள்ளுவனார்
மூப்பாலின்மிக்கமொழியுண்டெனப்பகர்வா
ரெப்பாலவரினுமில் ௰௭

(ஆசிரியர் நல்லந்துவனார்)

சாற்றியபல்கலையுந்தப்பாவருமறையும்
போற்றியுரைத்தபொருளெல்லாந் தோற்றவே
முப்பான்மொழிந்தமுதற்பாவலரொப்பா
ரெப்பாவலரினுமில் ௰௮

( கீரந்தையார். )

தப்பாமுதற்பாவாற்றமாண்டபாடலினன்
மூப்பாலினாற்பான்மொழிந்தவ ரெப்பாலும்
வைவைத்தகூர்வேல்வழுதிமனமகிழத்
தெய்வத்திருவள்ளுவர். ௰௯

( சிறுமேதாவியார். )

வீடொன்றுபாயிரநான்குவிளங்கற
நாடிய முப்பத்து மூன்றொன்றாம் கூடுபொரு
ளெள்ளிவெழுபதிருபதிற்றைந்தின்பம்
வள்ளுவர்சொன்னவகை. ௨௰

(௩)

( நல்கூர்வேள்வியார். )

உப்பக்கநோக்கியுபகேசிதோண்மணந்தா
னுத்தரமாமதுரைக்கச்சென்ப விப்பக்க
மாதானுபங்கிமறுவில்புலச்செந்நாப்
போதார்புனற்கூடற்கச்சு. ௨௧

( தொடித்தலைவிழுத்தண்டினார். )

அறநான்கறிபொருளேழொன்றுகாமத்
திறமூன்றெனப்பகுதிசெய்து பெறலரிய
நாலுமொழிந்தபெருநாவலரோதன் குணர்வார்
போலுமொழிந்தபொருள். ௨௨

( வெள்ளிவீதியார். )

செய்யாமொழிக்குந்திருவள்ளுவர்மொழிந்த
பொய்யாமொழிக்கும்பொருளொன்றே செய்யா
வதற்குரியாரந்தணரேயாராயினேனை
யிதற்குரியரல்லாதாரில். ௨௩

( மாங்குடிமருதனார். )

ஓதற்கெளிதாயுணர்தற்கரிதாகி
வேதப்பொருளாய்மிகவிளங்கித் தீதற்றோ
ருள்ளுதொறுள்ளுதொறுள்ளமுருக்குமே
வள்ளுவர்வாய்மொழிமாண்பு. ௨௪

( எறிச்சலூர்மலாடனார் )

பாயிரநான்கில்லறமிருபான்பன்மூன்றே
தூயதுறவறமொன்றூழாக வாய
வறத்துப்பானல்வகையாய்ந் துரைத்தார் நூலின்
திறத்துப்பால்வள்ளுவனார்தேர்ந்து. ௨௫

( ௬ )

( போக்கியார். )

அரசியலையைந்தமைச்சியலீரைந்
தருவலரணிரண்டொன்றொண்கூழ் இருவிய
திண்படைநட்புப்பதினேழ்குடிபதின் மூன்
றெண்பொருளேழாமிவை. ௨௬

( மோசிகீரனார். )

ஆண்பாலேழாறிரண்டுபெண்பாலடுத்தன்பு
பூண்பாலிருபாலோரோராறாக மாண்பாய

காமத்தின்பக்கமொருமூன்றாகக்கட்டுரைத்தார்
நாமத்தின்வள்ளுவனார்நன்கு உ௭

( காவிரிப்பூம்பட்டினத்துக்
ஐயாறுநூறுமதிகாரமூன்றுமா

காரிக்கண்ணனார். )

மெய்யாயவேதப்பொருள்விளங்கப் பொய்யாது
தந்தானுலகிற்குத்தான்வள்ளுவனாகி
யந்தாமரைமேலயன். உ௮

( மதுரைத்தமிழ்நாயகனார் )
எல்லாப்பொருளுமிதன்பாலுளவிதன்பா
லில்லாதவெப்பொருளுமில்லையாற்
சொல்லாற் பரந்தபாவாலென்பயன்வள்ளுவனார்
சுரந்தபாவையத்துணை. உ௯

( பாரதம்பாடியபெருந்தேவனார் )
எப்பொருளும்யாருமியல்பினறிவுறச்
செப்பியவள்ளுவர்தாஞ்செப்பவரு முப்பாற்குப்
பாரதஞ்சீராமகதைமநுப்பண்டைமறை
நேர்வனமற்றில்லைநிகர். ௩௰

( உருத்திரசன்மகண்ணர் )

மணற்கிளைக்கநீரூறுமைந்தர்கள்வாய்வைத்
துணைச்சுரக்குந்தாய்முலையொண்பால்
பிணக்கிலா
வாய்மொழிவள்ளுவர்முப்பால்மதிப்புலவோர்க்
காய்தொறூறுமறிவு. ௰௧

( பெருஞ்சித்தனார் )

ஏதமில்வள்ளுவரின்குறள்வெண்பாவினு
லோதியவொண்பொருளெல்லாமுரைத்ததனாற்
றாதவிழ்தார்மாறதாமேதமைப்பயந்த
வேதமேமேதக்கன. ௰௨

( நரிவெருத்தலையார் )

இன்பம்பொருளறம்வீடென்னுமிந்நான்கு
முன்பறியச்சொன்னமுதுமொழிநூன் மூன்புதைகட்
குள்ளவரிதென்றவைவள்ளுவருலகங்
கொள்ளமொழிந்தார்குறள். ௰௩

( மதுரைத்தமிழாசிரியர்செங்குன்றூர்கிழார் )

புலவர்திருவள்ளுவரன்றிப்பூமேற்
சிலவர்புலவரெனச்செப்ப    னிலவு
பிறங்கொளிமாலைக்கும்பெயர்மாலைமற்றுங்
கறங்கிருண்மாலைக்கும்பெயர்.    ௩௪

( மதுரையறுவைவாணிகனிளவேட்டனார் )

இன்பமுந் துன்பமுமென்னுமிவையிரண்டு
மன்பதைக்கெல்லாமனமகிழ    வன்பொழியா
துள்ளியுணரவுரைத்தாரோயோதுசீர்
வள்ளுவர்வாயுறைவாழ்த்து.    ௩௫

( ௮ )

( கவிசாகரப்பெருந்தேவனார் )

பூவிற்குத்தாமரையேபொன்னுக்குச்சாம்புநத
மாவிற்கருமுனியாயானைக்கமோரும்ப
ரேவிற்றிருமாலெனச்சிறந்ததென்பவே
பாவிற்குவள்ளுவர்வெண்பா.    ௩௬

( மதுரைப்பெருமருதனார் )

அறமுப்பத்தெட்டுப்பொருளெழுபதின்பத்
திறமிருபத்தைந்தாற்றெளிய    முறைமையால்

வேதவிழுப்பொருளைவெண்குறளால்வள்ளுவனு
ரோதவழுக்கற்றதுலகு. ௨௭

(கோவூர்க்கிழார்)

அறமுதனான்குமகலிடத்தோரெல்லாந்
திறமுறத்தேர்ந்துதெளியக் குறள்வெண்பாப்
பன்னியவள்ளுவனார்பான்முறைநேரொவ்வாதே
முன்னைமுதுவோர்மொழி. ௨௮

(உறையூர்முதுகூற்றனார்)

தேவிற்சிறந்ததிருவள்ளுவர்குறள்வெண்
பாவிற்சிறந்திடுமுப்பால்பகரார் நாவிற்
குயவில்லைச்சொற்சுவைபோர்வில்லைமற்றுஞ்
செயவில்லையென்னுந்திரு. ௨௯

(இழிகட்பெருங்கண்ணனார்)

இம்மைமறுமையிரண்டுமெழுமைக்குஞ்
செம்மைநெறியின்றெளிவுபெற மும்மையின்
வீடவற்றினன்கில்விரவழங்கவள்ளுவனார்
பாடினரின்குறள்வெண்பா ௩௰

(செயிர்க்காவிரியார்மகனார்சாத்தனார்)

ஆவனவுமாகாதனவுமறிவுடையார்
யாவரும்வல்லாரெடுத்தியம்பத் தேவர்
திருவள்ளுவர்தாமுஞ்செப்பியவேசெய்வார்
பொருவிலொழுக்கம்பூண்டார். ௪௧

(செயலூர்க்கொடுஞ்செங்கண்ணனார்)

வேதப்பொருளை விரகால்விரித்துலகோ
ரோதத்தமிழா லுரைசெய்தா ராதலா
லுள்ளுநருள்ளும்பொருளெல்லாமுண்டென்ப
வள்ளுவர்வாய்மொழிமாட்டு. ௪௨

(வண்ணக்கஞ்சாத்தனார்)

ஆரியமுஞ்செந்தமிழுமாராய்ந்திதனிது
சீரியதென்றொன்றைச்செப்பரிதா லாரியம்
வேதமுடைத்துத்தமிழ்திருவள்ளுவனா
ரோதுகுறட்பாவுடைத்து. ௪௩

(களத்தூர்க்கிழார்)

ஒருவரிருகுறளேமுப்பாலினோதுந்
தருமமுதனான்குஞ்சாலும் மருமறைக
ளைந்துஞ்சமயநூலாறுநம்வள்ளுவனார்
புந்திமொழிந்தபொருள். ௪௪

(நச்சுமனார்)

எழுத்தசைசீரடிசொற்பொருள்யாப்பு
வழுக்கில்வனப்பணிவண்ண மிழுக்கின்றி
வென்றெவர்செய்தனவெல்லாமியம்பின
வின்றிவரின்குறள்வெண்பா. ௪௫

௱

(அக்காரக்கனிநச்சுமனார்)

கலைநிரம்பிக்காண்டற்கினிதாகிக்கண்ணி
னிலைநிரம்புநீர்மைத்தெனினுந் தொலைவிலா
வானூர்மதியந்தனக்குண்டோவள்ளுவர்முப்
பானூனயத்தின்பயன்
௪௬

(நப்பாலத்தனார்)

அறந்தகளியான்றபொருடிரியின்பு
சிறந்தநெய்செஞ்சொற்றீத்தண்டு குறும்பாவால் வ
ள்ளுவனாரேற்றினார்வையத்துவாழ்வார்க
ளுள்ளிருணீக்கும்விளக்கு.
௪௭

(குலபதிநாயனார்)

உள்ளக்கமலமலர்த்தியுளத்துள்ள

தள்ளற்கரியவிருடள்ளுதலால் வள்ளுவனார்
வெள்ளைக்குறட்பாவும்வெங்கதிருமொக்குமெனக்
கொள்ளத்தகுங்குணத்தைக்கொண்டு. ௪அ

(தேனிக்குடிக்கீரனார்)

பொய்ப்பாலபொய்யேயாய்ப்போயினபொய்யல்லாத
மெய்ப்பாலமெய்யாய்விளங்கினவே முப்பாலிற்
றெய்வத்திருவள்ளுவர்செப்பியகுறளால்
வையத்துவாழ்வார்மனத்து.
௪௯

(கொடிஞாழன்மாணிபூதனார்)

அறனறிந்தேமான்றபொருளறிந்தேமின்பின்
றிறனறிந்தேம்வீடுதெளிந்தேம் மறனெறிந்த
வாளார்நெடுமாறவள்ளுவனார்தம்வாயாற்
கேளாதனவெல்லாங்கேட்டு.

௫௰



(கவுணியனார்)

சிந்தைக்கினியசெவிக்கினியவாய்க்கினிய
வந்தவிருவினைக்குமாமருந்து முந்திய
நன்னெறிநாமறியநாப்புலமைவள்ளுவனார்
பன்னியவின்குறள்வெண்பா. ௫க

(மதுரைப்பாலாசிரியனார்)
வெள்ளியியாமம்விளங்கிரவிவெண்டிங்கள்
பொள்ளெனநீக்கும்புறவிருளைத் தெள்ளிய
வள்ளுவரின்குறள்வெண்பாவகிலத்தோ
ருள்ளிருணீக்குமொளி ருஉ

(ஆலங்குடிவங்கனார்)
வள்ளுவர்பாட்டின்வளமுரைக்கின்வாய்மடுக்குந்
தெள்ளமுதின்றீஞ்சுவையுமொவ்வாதாற் றெள்ளமுத
முண்டறிவார்தேவருலகடையவுண்ணுமால்
வண்டமிழின்முப்பான்மகிழ்ந்து ருங

---

## திருவள்ளுவமாலைமுற்றிற்றுமுற்றும்.

( உ ) உம். அதி. வான்சிறப்பு

வானின்றுலகம்வழங்கிவருதலாற்
றானமிழ்தமென்றுணாற்பாற்று.
* க * துப்பார்க்குத்துப்பாயது
ப்பார்க்கித்துப்பார்க்குத் துப்பாயதூஉமழை.
* உ *

விண்ணின் றுபொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும்பசி.

* ௩ * ஏரினுழா அருழவர்புயலென்னும்
வாரிவளங்குன்றிக்கால்.

* ௪ *

கெடுப்பதூ
உங்கெட்டார்க்குச்சார்வாய்மற்றாங்கே யெடுப்பதூ
உமெல்லாமழை. * ௫ *

விசும்பிற் றுளிவீழினல்லான்மற்றாங்கே
பசும்புற்றலைகாண்பரிது.
* ௬ *

நெடுங்கடலுந் தன்னீர்மைகுன்றுந் தடிந்தெழிலி
தானல்காதாகிவிடின்.

* ௭ *

சிறப்பொடுபூசனைசெல்லாதுவானம்
வறக்குமேல்வானோர்க்குமீண்டு. * ௮ *

தானந்தவமிரண்டுந்தங்காவியனுலகம்
வானம்வழங்காதெனின்.

* ௯ *

நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு *௨௰*

அ. ௨ம்.

௩ம். அதி. நீத்தார்பெருமை.

( ௧ )

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

* ௧ *

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

* ௨ *

இருமைவகைதெரிந்தீண்டறம்பூண்டார்
பெருமைபிறங்கிற்றுலகு.

* ௩ *

உரனென்னுந்தோட்டியானோரைந்துங்காப்பான்
வரனென்னும்வைப்பிற்கோர்வித்து.

* ௪ * ஐந்தவித்தானாற்றலகல்விசும்புளார்கோமா
னிந்திரனேசாலுங்கரி.

* ௫ * செயற்கரியசெய்வார்பெரியர்சிறியர்
செயற்கரியசெய்கலாதார்.

* ௬ *

சுவையொளியூறோசைநாற்றமென்றைந்தின்
வகைதெரிவான்கட்டேயுலகு.

* ௭ * நிறைமொழிமாந்தர்பெருமைநிலத்து
மறைமொழிகாட்டிவிடும்.

* அ *

குணமென்னுங்குன்றேறிநின்றார்வெகுளி |
கணமேயுங்காத்தலரிது.

* கூ *

அந்தணரென்போரறவோர்மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மைபூண்டொழுகலான். * ய *

அதிகாரம் ( ௪ ) ௪ம். அதி.

அறன்வலியுறுத்தல்.

சிறப்பீனுஞ்செல்வமுமீனுமறத்தினூ உங்
காக்கமெவனோவுயிர்க்கு.

அறத்தினூஉங்காக்கமுமில்லையதனை
* க * மறத்தலினூங்கில்லைகேடு.

* ௨ *

ஒல்லும்வகையாலறவினையோவாதே
செல்லும்வாயெல்லாஞ்செயல்

* ௩ *

மனத்துக்கண்மாசிலனாதலனைத்தற
னாகுலநீரபிற.

* ௪ *

அழுக்காறவாவெகுளியின்னாச்சொன்னான்கு
மிழுக்காவியன்றதறம்.

* ௫ *

அன்றறிவாமென்னாதறஞ்செய்கமற்றது
பொன்றுங்காற்பொன்றாத்துணை.

* ௬ *

அறத்தாறிதுவெனவேண்டாசிவிகை
பொறுத்தானோடூர்ந்தானிடை.

* ௭ *

வீழ்நாள்படாஅமைநன்றாற்றின்ஃதொருவன்
வாழ்நாள்வழியடைக்குங்கல். * அ *

அறத்தான்வருவதேயின்பமற்றெல்லாம்
புறத்தபுகழுமில.

செயற்பாலதோருமறனேயொருவற்
* கூ * குயற்பாலதோரும்பழி. * ௰ *

அதி. ௪ குறள். ௪௰.

இல்வாழ்க்கை. ( ரு )

இல்வாழ்வானென்பானியல்புடையமூவர்க்கு
நல்லாற்றினின்றதுணை

* க *

துறந்தார்க்குந்துவ்வாதவர்க்குமிறந்தார்க்கு
மில்வாழ்வானென்பான்றுணை

* உ *

தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கறானென்றாங்
கைம்புலத்தாறோம்பறலை * ௩

* பழியஞ்சிப்பாத்தூணுடைத்தாயின்வாழ்க்கை
வழியெஞ்சலெஞ்ஞான்றுமில்

* ௪ *

அன்புமறனுமுடைத்தாயினில்வாழ்க்கை
பண்பும்பயனுமது

* ௫ *

அறத்தாற்றினில்வாழ்க்கையாற்றிற்புறத்தாற்றிற்
போஒய்ப்பெறுவதெவன்

* ௬ *

இயல்பினானில்வாழ்க்கைவாழ்பவனென்பான்
முயல்வாருளெல்லாந்தலை

* ௭ *

ஆற்றினொழுக்கியறனிழுக்காவில்வாழ்க்கை
நோற்பாரினோன்மையுடைத்து

* ௯ *

அறனெனப்பட்டதேயில்வாழ்க்கையஃதும்
பிறன்பழிப்பதில்லாயினன்று

* ௰ *

வையத்துள்வாழ்வாங்குவாழ்பவன்வானுறையுந்
தெய்வத்துள்வைக்கப்படும். * ௫ * ஆடு.

( ௬ ) ௬ம். அதி. வாழ்க்கைத்துணைநலம்.

மனைத்தக்கமாண்புடையளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள்வாழ்க்கைத்துணை

* ௧ *

மனைமாட்சியில்லாள்கணில்லாயின்வாழ்க்கை
யெனைமாட்சித்தாயினுமில்

* ௨ *

இல்லதெனில்லவண்மாண்பானாலுள்ளதெ
னில்லவண்மாணாக்கடை

* ௩ *

பெண்ணிற்பெருந்தக்கயாவுளகற்பென்னுந்
திண்மையுண்டாகப்பெறின்

* ௪ *

தெய்வந்தொழாஅள்கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை

* ௫ *

தற்காத்துத்தற்கொண்டாற்பேணித்தகைசான்ற
சொற்காத்துச்சோர்விலாள்பெண்

* ௬ *

சிறைகாக்குங்காப்பெவன்செய்யுமகளிர்
நிறைகாக்குங்காப்பேதலை

* ௭ *

பெற்றாற்பெறிற்பெறுவர்பெண்டிர்பெருஞ்சிறப்புப்
புத்தேளிர்வாழுமுலகு

* ௮ *

புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லையிகழ்வார்முன்
னேறுபோற்பீடுநடை

* ௯ *

மங்கலமென்பமனைமாட்சிமற்றத
னன்கலநன்மக்கட்பேறு

* ௰ * அதிகாரம்

எம். அதி. புதல்வரைப்பெறுதல்.

( எ )

பெறுமவற்றுள்யாமறிவதில்லையறிவறிந்த
மக்கட்பேறல்லபிற

* ௧ *
எழுபிறப்புந்தீயவைதீண்டாபழிபிறங்காப்
பண்புடைமக்கட்பெறின்

* ௨ * தம்பொருளென்பதம்மக்களவர்பொருள்
டந்தம்வினையால்வரும்

* ௩ * அமிழ்தினுமாற்றவினிதேதம்மக்கள்
சிறுகையளாவியகூழ்

* ௪ * மக்கண்மெய்தீண்டலுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு

* ௫ * குழலினிதியாழினிதென்பதம்மக்கண்
மழலைச்சொற்கேளாதவர்

* ௬ *

தந்தைமகற்காற்றுநன்றியவையத்து
முந்தியிருப்பச்செயல்

* ௭ * தம்மிற்றம்மக்களறிவுடைமைமாநிலத்து
மன்னுயிர்க்கெல்லாமினிது

* ௮ *

ஈன்றபொழுதிற்பெரிதுவக்குந்தன்மகனைச்
சான்றோனெனக்கேட்டதாய்

* ௯ *

மகன்றந்தைக்காற்றுமுதவியிவன்றந்தை
யென்னோற்றான்கொல்லெனுஞ்சொல் * ௰

* ௮௰௭

## ௯ம் அதி. விருந்தோம்பல்.

( ௯ )

இருந்தோம்பியில்வாழ்வதெல்லாம்விருந்தோம்பி
வேளாண்மைசெய்தற்பொருட்டு

* ௧ * விருந்துபுறத்ததாத்தானுண்டல்சாவா
மருந்தெனினும்வேண்டற்பாற்றன்று

* ௨ *
வருவிருந்துவைகலுமோம்புவான்வாழ்க்கை
பருவந்துபாழ்படுதலின்று

* ௩ * அகனமர்ந்துசெய்யாளுறையுமுகனமர்ந்து
நல்விருந்தோம்புவானில
* ௪ *

வித்துமிடல்வேண்டுங்கொல்லோவிருந்தோம்பி
மிச்சின்மிசைவான்புலம்

* ௫ *

செல்விருந்தோம்பிவருவிருந்துபார்த்திருப்பா
னல்விருந்துவானத்தவர்க்கு

* ௬ *

இனைத்துணைத்தென்பதொன்றில்லைவிருந்தின்
றுணைத்துணைவேள்விப்பயன்

* ௭ *

பரிந்தோம்பிப்பற்றற்றேமென்பர்விருந்தோம்பி
வேள்விதலைப்படாதார்

* ௮ *

உடைமையுளின்மைவிருந்தோம்பலோம்பா
மடமைமடவார்கணுண்டு

* ௯ *

மோப்பக்குழையுமனிச்சமுகந்திரிந்து
நோக்கக்குழையும்விருந்து

* ൧ * அதிகாரம்.

( அ ) அம். அதி.

அன்புடைமை.

அன்பிற்குமுண்டோவடைக்குந்தாழார்வலர்
புன்கணீர்பூசறரும்
* ௧ *

அன்பிலாரெல்லாந்தமக்குரியரன்புடையா
ரென்புமுரியர்பிறர்க்கு

அன்போடியைந்தவழக்கென்பவாருயிர்க்
* ௨ * கென்போடியைந்ததொடர்பு

* ௩ *

அன்பீனுமார்வமுடைமையதுவீனு
நண்பென்னுநாடாச்சிறப்பு

அன்புற்றமர்ந்தவழக்கென்பவையகத்
தின்புற்றாரெய்துஞ்சிறப்பு

அறத்திற்கேயன்புசார்பென்பவறியார்
மறத்திற்குமஃதேதுணை

என்பிலதனைவெயிற்போலக்காயுமே
யன்பிலதனையறம்

அன்பகத்தில்லாவுயிர்வாழ்க்கைவன்பாற்கண்
வற்றன்மரந்தளிர்த்தற்று

* ௮ *

புறத்துறுப்பெல்லாமெவன்செய்யும்யாக்கை
யகத்துறுப்பன்பிலவர்க்கு

* ௯ *

ன்பின்வழியதுயிர்நிலையஃதிலார்க்

முகத்தானமர்ந்தினிதுநோக்கியகத்தானா
* ௨ * மின்சொலினதேயறம்

* ௩ *

துன்புறூஉந் துவ்வாமையில்லாகும்யார்மாட்டு
மின்புறூஉமின்சொலவர்க்கு

* ௪ *

பணிவுடையனின்சொலனாதலொருவற்
கணியல்லமற்றுப்பிற

அல்லவைதேயவறம்பெருகுநல்லவை
* ௫ * நாடியினியசொலின்

நயனீன்றுநன்றிபயக்கும்பயனீன்று
* ௬ * பண்பிற்றலைப்பிரியாச்சொல்

சிறுமையுநீங்கியவின்சொன்மறுமையு
* ௭ * மிம்மையுமின்பந்தரும்

* ௮ *

இன்சொலினிதீன்றல்காண்பானெவன்கொலோ
வன்சொல்வழங்குவது *

௱ * இனியவுளவாகவின்னாதகூறல்
கனியிருப்பக்காய்கவர்ந்தற்று

* * ஆடா.

௰௧ம். அதி. செய்ந்நன்றியறிதல்.

( ௰௧ )

செய்யாமற்செய்தவுதவிக்குவையகமும்
வானகமுமாற்றலரிது

* ௨ * காலத்தினாற்செய்தநன்றிசிறிதெனினு
ஞாலத்தின்மாணப்பெரிது

பயன்றூக்கார்செய்தவுதவிநயன்றூக்கி
னன்மைகடலிற்பெரிது

* ௨ *

* ௩ *

தினைத்துணைநன்றிசெயினும்பனைத்துணையாக்
கொள்வர்பயன்றெரிவார்

* ௪ *

உதவிவரைத்தன்றுதவி
செயப்பட்டார்சால்பின்வரைத்து

மறவற்கமாசற்றார்கேண்மைதுறவற்க
துன்பத்துட்டுப்பாயார்நட்பு

எழுமையெழுபிறப்புமுள்ளுவர்தங்கண்
விழுமந்துடைத்தவர்நட்பு

நன்றிமறப்பதுநன்றன்றுநன்றல்ல
தன்றேமறப்பதுநன்று

கொன்றன்னவின்னாசெயினுமவர்செய்த
வொன்றுநன்றுள்ளக்கெடும்

எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வில்லைச்
செய்ந்நன்றிகொன்றமகற்கு * ௰ *
ஆடாய.

* ௬ *

* ௯ *

* ௭ *

* ௮ *

* ௯ *

( ௰௨ ) ௰௨ம் அதி. நடுவுநிலைமை.

தகுதியெனவொன் றுநன்றேபகுதியாற்
பாற்பட்டொழுகப்பெறின்

செப்பமுடையவனாக்கஞ்சிதைவின்றி
யெச்சத்திற்கேமாப்புடைத்து

நன்றேதரினுநடுவிகந்தாமாக்கத்தை
யன்றேயொழியவிடல்

தக்கார்தகவிலரென்பதவரவ
ரெச்சத்தாற்காணப்படும்

கேடும்பெருக்கமுமில்லல்லநெஞ்சத்துக்
கோடாமைசான்றோர்க்கணி

* ௰ * கெடுவல்யானென்பதறிகதன்னெஞ்ச
நடுவொரீஇயல்லசெயின்

* கா * கெடுவாகவையாதுலகநடுவாக
நன்றிக்கட்டங்கியான்றாழ்வு

* ௭ *

சமன்செய் தசீர்தூக்குங்கோல்போலமைந்தொருபாற்
கோடாமைசான்றோர்க்கணி * ௮

சொற்கோட்டமில்லதுசெப்பமொருதலையா
* வுட்கோட்டமின்மைபெறின்

* ௯ *

வாணிகஞ்செய்வார்க்குவாணிகம்பேணிப்
பிறவுந்தமபோற்செயின் * ௰ *

ஆ ா உடு

* ௧ *

* ௨ *

* ௩ *

* ௪ *

அடக்கமமரருளுய்க்குமடங்காமை
யாரிருளுய்த்துவிடும்

காக்கபொருளாவடக்கத்தையாக்க
மதனினூஉங்கில்லையுயிர்க்கு

செறிவறிந்துசீர்மைபயக்குமறிவறிந்
தாற்றினடங்கப்பெறின்

நிலையிற்றிரியாதடங்கியான்றோற்ற
மலையினுமாணப்பெரிது

எல்லார்க்குநன்றாம்பணிதலவருள்ளுஞ்
செல்வர்க்கேசெல்வந்தகைத்து

ஒருமையுளாமைபோலைந்தடக்கலாற்றி
னெழுமையுமேமாப்புடைத்து.

யாகாவாராயினுநாகாக்ககாவாக்காற்
சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு

ஒன்றானுந்தீச்சொற்பொருட்பயனுண்டாயி
னன்றாகாதாகிவிடும்

* ௮ * தீயினாற்சுட்டபுணுள்ளாறுமாறாதே
நாவினாற்சுட்டவடு

* ௯ *

கதங்காத்துக்கற்றடங்கலாற்றுவான்செவ்வி
யறம்பார்க்குமாற்றினுழைந்து * ௰

* ஆகாய

* ௪ *

* ௨ *

* ஙா *
* ச *

* ஞு *
* ஞா *

* ஏ *

௰௫ம் அதி. பிறனில்விழையாமை. ( ௰௫ )

பிறன்பொருளாட்பெட்டொழுகும்பேதைமைஞாலத் *
தறம்பொருள்கண்டார்கணில்

அறன்கடைநின்றாருளெல்லாம்பிறன்கடை
௧ * நின்றாரிற்பேதையாரில்

* ௨ *

விளிந்தாரின்வேறல்லர்மன்றதெளிந்தாரிற்
தீமைபுரிந்தொழுகுவார்

* ௩ * ஏனைத்து

ணையராயினுமென்னாந்தினைத்துணையுந்
தேரான்பிறனில்புகல்

* ௪ *

எளிதெனவில்லிறப்பானெய்துமெஞ்ஞான்றும்
விளியாதுநிற்கும்பழி

பகைபாவமச்சம்பழியெனநான்கு
* ௫ * மிகவாவாமில்லிறப்பான்கண்

* ௬ *

அறனியலானில்வாழ்வானென்பான்பிறனியலாள்
பெண்மைநயவாதவன்

* ௭ *

பிறன்மனைநோக்காதபேராண்மைசான்றோர்க்
கறனொன்றோவான்றவொழுக்கு

நலக்குரியார்யாரெனினாமநீர்வைப்பிற்
* ௮ * பிறற்குரியாடோடோயாதார்

* ௨ *

இன்மையுளின்மைவிருந்தொரால்வன்மையுள்
வன்மைமடவார்ப்பொறை

* ௩ *

நிறையுடைமைநீங்காமைவேண்டிற்பொறையுடைமை
போற்றியொழுகப்படும்

* ௪

*

ஒறுத்தாரையொன்றாகவையாரேவைப்பர்
பொறுத்தாரைப்பொன்போற்பொதிந்து

* ௫ *

ஒறுத்தார்க்கொருநாளையின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும்புகழ்

* ௬ *

திறனல்லதற்பிறர்செய்யினுநோநொந்
தறனல்லசெய்யாமைநன்று

*

௭ *

மிகுதியான்மிக்கவைசெய்தாரைத்தாந்தந்
தகுதியான்வென்றுவிடல்

துறந்தாரிற்றூய்மையுடையரிறந்தார்வா
* ௮ * யின்னாச்சொனோற்கிற்பவர்

உண்ணாதுநோற்பார்பெரியர்பிறர்சொல்லு
* ௯ * மின்னாச்சொனோற்பாரிற்பின் *

௰ * அடாகம.

[illegible]

( ௰௬ ) ௰௬ம் அதி. பொறையுடைமை.

அகழ்வாரைத்தாங்குநிலம்போலத்தம்மை
யிகழ்வார்ப்பொறுத்தறலை

பொறுத்தலிறப்பினையென்றுமதனை
மறத்தலதனினுநன்று

* ௧ *

* ௨ *

இன்மையுளின்மைவிருந்தொரால்வன்மையுள்
வன்மைமடவார்ப்பொறை

* ௩ *

நிறையுடைமைநீங்காமைவேண்டிற்பொறையுடைமை
போற்றியொழுகப்படும்

* ௪

*

ஒறுத்தாரையொன்றாகவையாரேவைப்பர்
பொறுத்தாரைப்பொன்போற்பொதிந்து

* ௫ *

ஒறுத்தார்க்கொருநாளையின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும்புகழ்

* ௬ *

திறனல்லதற்பிறர்செய்யினுநோநொந்
தறனல்லசெய்யாமைநன்று
* எ *

மிகுதியான்மிக்கவைசெய்தாரைத்தாந்தந்
தகுதியான்வென்றுவிடல்

துறந்தாரிற்றூய்மையுடையரிறந்தார்வா
யின்னாச்சொனோற்கிற்பவர்
* அ *

உண்ணாதுநோற்பார்பெரியர்பிறர்சொல்லு
மின்னாச்சொனோற்பாரிற்பின்
* க *

ம * அதிகாரம்.

மஎ அதி. அழுக்காறாமை. ( மஎ )

ஒழுக்காறாக்கொள்கவொருவன்றன்னெஞ்சத்
தழுக்காறிலாதவியல்பு

* ௧ *

விழுப்பேற்றினஃதொப்பதில்லையார்மாட்டு
மழுக்காற்றினன்மைபெறின்

* ௨ *

அறனாக்கம்வேண்டாதானென்பான்பிறனாக்கம்
பேணாதழுக்கறுப்பான்

* ௩ *

அழுக்காற்றினல்லவைசெய்யாரிழுக்காற்றி
னேதம்படுபாக்கறிந்து

* ௪ *

அழுக்காறுடையார்க்கதுசாலுமொன்னார்
வழுக்கியுங்கேடீன்பது

* ௫ *

கொடுப்பதழுக்கறுப்பான்சுற்றமுடுப்பதூஉ
முண்பதூஉமின்றிக்கெடும்

அவ்வித்தழுக்கா றுடையானைச்செய்யவ
* ௬ * டவ்வையைக்காட்டிவிடும்

* ௭ *

அழுக்காறெனவொருபாவிதிருச்செற்றுத்
தீயுழியுய்த்துவிடும்

* ௮ *

அவ்வியநெஞ்சத்தானாக்கமுஞ்செவ்வியான்
கேடுநினைக்கப்படும்

அழுக்கற்றகன்றாருமில்லையஃதிலார்
* ௯ * பெருக்கத்திற்றீர்ந்தாருமில்

* ௰ * அ-ா ௭௰.

( ௰அ ) ஸ்ரீராம் அரி. வெங்கடம.

நடுவின்றிநன்பொருள்வெஃகிற்குடிபொன்றிக்
குற்றமுமாங்கேதரும்

படுபயன்வெஃகிப்பழிப்படுவசெய்யார்
* க * நடுவன்மைநாணுபவர்

* உ *

சிற்றின்பம்வெஃகியறனல்லசெய்யாரே
மற்றின்பம்வேண்டுபவர்

* ௩ *

இலமென்றுவெஃகுதல்செய்யார்புலம்வென்ற
புன்மையில்காட்சியவர்

அஃகியகன்றவறிவென்னாம்யார்மாட்டும்
* ௪ * வெஃகிவெறியசெயின்

* ௫ *

அருள்வெஃகியாற்றின்கணின்றான்பொருள்வெஃகிப்
பொல்லாதசூழக்கெடும் *

௬ * வேண்டற்கவெஃகியாமாக்கம்விளைவயின்

மாண்டற்கரிதாம்பயன்

* ௭ *

அஃகாமைசெல்வத்திற்கியாதெனின்|வெஃகாமை
வேண்டும்பிறன்கைப்பொருள்

* ௮ *

அறனறிந்துவெஃகாவறிவுடையார்ச்சேருந்|
திறனறிந்தாங்கேதிரு

* ௯ *

இறலீனுமெண்ணாதுவெஃகின்|விறலீனும்
வேண்டாமையென்னுஞ்செருக்கு * ௰ * ௧௱௮௰.

௰௯ம் அதி. புறங்கூறாமை. ( ௰௯ )

அறங்கூறானல்லசெயினுமொருவன்|
புறங்கூறானென்றலினிது

* ௧ *

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை

* ௨ *

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்

* ௩ *

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்

* ௪ *

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்

* ௫ *

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்

* ௬ *

பகச்சொல்லிக்கேளிர்ப்பிரிப்பர்/நகச்சொல்லி
நட்பாடறேற்றாதவர்

* ௭ *

துன்னியார்குற்றமுந்தூற்றுமரபினர்/
என்னைகொலேதிலார்மாட்டு

* ௮ *

அறனோக்கியாற்றுங்கொல்வையம்/புறனோக்கிப்
புன்சொலுரைப்பான்பொறை

* ௯ *

ஏதிலார்குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பின்/
தீதுண்டோமன்னுமுயிர்க்கு * ௰ * ஆக ௱௯௰.

( ௨௰ ) ௨௰ம் அதி. பயனிலசொல்லாமை

பல்லார்முனியப்பயனிலசொல்லுவா/
னெல்லாருமெள்ளப்படும்

பயனிலபல்லார்முன்சொல்லல்நயனில
* ௧ * நட்டார்கட்செய்தலிற்றீது

* ௨ *

நயனிலனென்பதுசொல்லும்பயனில
பாரித்துரைக்குமுரை

நயன்சாராநன்மையினீக்கும்பயன்சாராப்
* ௩ * பண்பில்சொற்பல்லாரகத்து

சீர்மைசிறப்பொடுநீங்கும்பயனில
* ௪ * நீர்மையுடையார்சொலின்

* ௫ *

பயனில்சொற்பாராட்டுவானைமகனெனல்
மக்கட்பதடியெனல்

* ௬ *

நயனிலசொல்லினுஞ்சொல்லுகசான்றோர்
பயனிலசொல்லாமைநன்று

அரும்பயனையுமறிவனர்/சொல்லார்
* எ * பெரும்பயனில்லாதசொல்

* அ *

பொருமொர்ந்தபொச்சாந் துஞ்சொல்லார்/மருமொர்ந்த
மாசறுகாட்சியவர் * கூ

சொல்லுகசொல்விற்பய னுடையசொல்லற்க
* சொல்விற்பயனிலாச்சொல் *

ய * ஆ௨ உா.

உயகம் அதி. தீவினையச்சம். (உயக)

தீவினையாரஞ்சார்விழுமியாரஞ்சுவர்/
தீவினையென் னுஞ்செருக்கு

தீயவைதீயபயத்தலாற்றீயவை
தீயினுமஞ்சப்படும்

அறிவினுளெல்லாந்தலையென்பதீய
செறுவார்க்குஞ்செய்யாவிடல்

மறந்தும்பிறன்கேடுசூழற்கசூழி
னறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு

இலனென்றுதீயவைசெய்யற்கசெய்யி
னிலனாகும்மற்றும்பெயர்த்து

* ௫ *

தீப்பாலதான்பிறர்க ட்செய்யற்கநோய்ப்பால
தன்னையடல்வேண்டாதான்

* ௫ *

எனைப்பகையுற்றாருமுய்வர்வினைப்பகை
வீயாதுபின்சென்றடும்

* எ *

தீயவைசெய்தார்கெடுதனிழறன்னை
வீயாதடியுறைந்தற்று

* அ *

தன்னைத்தான்காதலனாயினெனைத்தொன்றுந்
துன்னற்கதீவினைப்பால்

அருங்கேடனென்பதறிகமருங்கோடித்
* கூ * தீவினைசெய்யானெனின்

* ய * அஉ உாய.

* க *

* உ *

* ந *
* ச *

கைம்மாறுவேண்டாகடப்பாடுமாரிமாட்
டென்னாற்றுங்கொல்லோவுலகு
* ௧ *

தாளாற்றித்தந்தபொருளெல்லாந்தக்கார்க்கு
வேளாண்மைசெய்தற்பொருட்டு

* ௨ * புத்தேளுலகத்துமீண்டும்பெறலரிதே
யொப்புரவினல்லபிற
* ௩ * ஒத்ததறிவானுயிர்வாழ்வானேமற்றையான்
செத்தாருள்வைக்　　　கப்படும்
* ௪ *

ஊருணிநீர்நிறைந்தற்றேயுலகவாம்
பேரறிவாளன்றிரு

* ௫ * பயன்மரமுள்ளூர்ப்பழுத்தற்றாற்செல்வ
நயனுடையான்கட்படின்
* ௬ *

மருந்தாகித்தப்பாமரத்தற்றாற்செல்வம்
பெருந்தகையான்கட்படின்

* எ *

இடனில்பருவத்துமொப்புரவிற்கொல்கார்
கடனறிகாட்சியவர்

* அ *

நயனுடையானல்கூர்ந்தானாதல்செயுநீர்மை
செய்யாதமைகலாவாறு * கூ *

ஒப்புரவினால்வருங்கேடெனினஃதொருவன்
விற்றுக்கோட்டக்கதுடைத்து * ௰ * ஆக

௨௱௨௰. ௨௰௩ம் அதி. ஈகை.

( ௨௰௩ )

வறியார்க்கொன்றீவதேயீகை மற்றெல்லாங்
குறியெதிர்ப்பைநீரதுடைத்து

நல்லாறெனினுங்கொளறீது மேலுலக
மில்லெனினுமீதலேநன்று

இலனென்னுமெவ்வமுரையாமை யீதல்
குலனுடையான்கண்ணேயுள

இன்னாதிரக்கப்படுத லிரந்தவ
ரின்முகங்காணுமளவு

ஆற்றுவாராற்றல்பசியாற்ற லப்பசியை
மாற்றுவாராற்றலிற்பின்

அற்றாரழிபசிதீர்த்த லஃதொருவன்
பெற்றான்பொருள்வைப்புழி

பாத்தூண்மரீஇயவனைப் பசியென்னுந்

* ஏ *

* ஸ *

* ஏ *

( உ௰௪ ) உ௰௪ம் அதி. புகழ்.

ஈதலிசைபடவாழ்த லதுவல்ல
தூதியமில்லையுயிர்க்கு

* க * உரைப்பாருரைப்பவையெல்லா
மிரப்பார்க்கொன் றீவார்மேனிற்கும்புகழ்

* உ * ஒன்றாவுலகத்துயர்ந்த புகழல்லாற்
பொன்றாதுநிற்பதொன் றில்

* ௩ * நிலவரைநீள்புகழாற்றிற் புலவரைப்
போற்றாதுபுத்தேளுலகு

* ௪ * நத்தம்போற்கேடுமுளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க்கல்லாலரிது

* ௫ *

தோன்றிற்புகழொடுதோன் றுக வஃதிலார்
தோன்றலிற்றோன்றாமைநன்று

* ௬ *

புகழ்படவாழாதார்தந்நோவார் தம்மை
இகழ்வாரைநோவதெவன்

* ௭ *

வசையென்பவையத்தார்க்கெல்லா மிசையென்று
மெச்சம்பெறுஅவிடின்

* ௮ *

வசையிலாவண்பயன்குன்று மிசையிலா
யாக்கைபொறுத்தநிலம்

* ௯ *

வசையொழியவாழ்வாரேவாழ்வா ரிசையொழிய
வாழ்வாரேவாழாதவர்

* ௰ * ஆக உ௱௪௰.

---

இல்லறவியன்முற்றிற்றுமுற்றும்.

உ௰௫ம். அதி. துறவறம்.

( உ௰௫ )

அருளுடைமை.

அருட்செல்வஞ்செல்வத்துட்செல்வம்பொருட்செல்வம்
பூரியார்கண்ணுமுள. * க

*

நல்லாற்றானாடியருளாள்க பல்லாற்றாற்
றேரினுமஃதே துணை.

* உ *

அருள்சேர்ந்தநெஞ்சினார்க்கில்லை யிருள்சேர்ந்த
வின்னாவுலகம்புகல்.

* ௩ *

மன்னுயிரோம்பியருளாள்வாற் கில்லென்ப
தன்னுயிரஞ்சும்வினை.

* ௪ *

அல்லலருளாள்வார்க்கில்லை வளிவழங்கு
மல்லன்மாஞாலங்கரி.

* ௫ *

பொருணீங்கிப்பொச்சாந்தாரென்பரருணீங்கி
யல்லவைசெய்தொழுகுவார்.

* ௭ *.

அருளில்லார்க்கவ்வுலகமில்லைப்பொருளில்லார்க்
கிவ்வுலகமில்லாகியாங்கு.

* ௮ * பொருளற்றார்பூப்பரொருகா லருளற்றா
ரற்றார்மற்றாதலரிது.

* ௯ *

தெருளாதான்மெய்ப்பொருள்கண்டற்றாற்றேரி
னருளாதான்செய்யுமறம்.

* ௰ *

வலியார்முற்றன்னைநினைக்க தான்றன்னின்
மெலியார்மேற்செல்லுமிடத்து. * ௰ * ஆ௨௱௫௰.

புலான்மறுத்தல்.

தன்னூன்பெருக்கற்குத்தான்பிறிதூனுண்பா
னெங்ஙனமாளுமருள்.

* க *

பொருளாட்சிபோற்றாதார்க்கில்லை யருளாட்சி
யாங்கில்லையூன்றின்பவர்க்கு

* உ * படைகொண்டார்நெஞ்சம்போனன்றூக்கா
தொன்ற னுடல்சுவையுண்டார்மநம்.

* ௩ *

அருளல்லதியாதெனிற்கொல்லாமை கோறல்
பொருளல்லதவ்வூன்றினல்.

* ௪ *

உண்ணாமையுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல்செய்யாதளறு.

* ௫ *

தினற்பொருட்டாற்கொல்லா துலகெனின்யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவாரில்

* ௬ *

உண்ணாமைவேண்டும்புலாஅல் பிறிதொன்றன்
புண்ணதுணர்வார்ப்பெறின்

* ௭ * செயிரிற்றலைப்பிரிந்தகாட்சியாருண்ணா
ருயிரிற்றலைப்பிரிந்தவூன்.

* ௮ * அவிசொரிந்தாயிரம்வேட்டலினொன்ற
னுயிர்செகுத்துண்ணாமைநன்று.

* ௯ * கொல்லான்புலாலைமறுத்தானைக்கைகூப்பி
யெல்லாவுயிருந்தொழும். * ௰ *
ஆக உ௱௬௰.

---

உ௰௭ம் அதி. தவம். ( உ௰௭ )

உற்றநோய்நோன்றலுயிர்க்குறுகண்செய்யாமை
யற்றேதவத்திற்குரு

* ௧ *

தவமுந்தவமுடையார்க்காகுமவமதனை
யஃதிலார்மேற்கொள்வது

* ௨ *

துறந்தார்க்குத்துப்புரவுவேண்டிமறந்தார்கொன்
மற்றையவர்கடவம்

ஒன்னார்த்தெறலுமுவந்தாரையாக்கலு
மெண்ணிற்றவத்தான்வரும்

* ௩ *

* ௪ *

வேண்டியவேண்டியாங்கெய்தலாற்செய்தவ
மீண்டுமுயலப்படும்

* ௫ *

தவஞ்செய்வார்தங்கருமஞ்செய்வார்மற்றல்லா
ரவஞ்செய்வாராசையுட்பட்டு * ௬ *

சுடச்சுடரும்பொன்போலொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுடநோற்கிற்பவர்க்கு

* ௭ *

தன்னுயிர்தானறப்பெற்றானையேனைய
மன்னுயிரெல்லாந்தொழும் * அ *

கூற்றங்குதித்தலுங்கைகூடுநோற்றலி
னாற்றறலைப்பட்டவர்க்கு

இலர்பலராகியகாரணநோற்பார்
சிலர்பலர்நோலாதவர்

* ௯ *

* ௰ * ஆக உ௱எ௰.

உ௰அ ) உ௰அம் அதி. கூடாவொழுக்கம்.

வஞ்சமனத்தான்படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்துமகத்தேநகும்

வானுயர்தோற்றமெவன்செய்யுந்

* க *

தன்னெஞ்சந்
தானறிகுற்றப்படின்

* உ * வலியினிலைமையான்வல்லுருவம் பெற்றம்
புலியின் றோல்போர்த்து மேய்ந்தற் று

* ௩ * தவமறைந்தல்லவைசெய்தல் புதன்மறைந் து
வேட்டுவன்புட்சிமிழ்த்தற்று

* ௪ * பற்றற்றேமென்பார்படிற்றொழுக்க
மெற்றெற்றென்
றேதம்பலவுந்தரும்

* ௫ *
நெஞ்சிற்றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின்வன்கணாரில்

* ௬ *

புறங்குன்றிகண்டனையரேனு மகங்குன்றி
மூக்கிற்கரியாருடைத்து

* எ *
மனத்தது மாசாகமாண்டார் நீராடி
மறைந்தொழுகுமாந்தர்பலர்

* ௮ *

கணைகொடிதியாழ்கோடுசெவ்விதாங் கன்ன
வினைபடுபாலாற் கொளல்

* ௯ * மழித்தலுநீட்டலும்வேண்டா வுலகம்
பழித்ததொழித்துவிடின் * ௰ * அற
உா ௨௮.

௨௰௯ம் அதி. கள்ளாமை. (

௨௰௯ ) எள்ள

ாமைவேண்டுவானென்பானெனைத்தொன்றுங்
கள்ளாமைகாக்கதன்னெஞ்சு
* ௧ *

உள்ளத்தாலுள்ளலுந்தீதேபிறன்பொருளைக்
கள்ளத்தாற்கள்வேமெனல்

களவினாலாகியவாக்கமளவிறந்
* ௨ * தாவதுபோலக்கெடும்

* ௩ *

களவின்கட்கன்றியகாதல்விளைவின்கண்
வீயாவிழுமந்தரும்

* ௪ *

அருள்கருதியன்புடையராதல்பொருள்கருதிப்
பொச்சாப்புப்பார்ப்பார்கணில்

* ௫ *

அளவின்கணின்றொழுகலாற்றார்களவின்கட்
கன்றியகாதலவர்

* ௬ * களவென்னுங்காரறிவாண்மையளவென்னு
மாற்றல்புரிந்தார்கணில்.
* ௭ *

அளவறிந்தார்நெஞ்சத்தறம்போலநிற்குங்
களவறிந்தார்நெஞ்சிற்கரவு.

* ௮ * அளவல்லசெய்தாங்கேவீவர்களவல்ல

மற்றையதேற்றாதவர்.

* ௯ *

கள்வார்க்குத்தள்ளுமுயிர்நிலைகள்ளார்க்குத்
தள்ளாதுபுத்தேளுலகு. * ௰ *

ஆ_ உ௱௯௰. ( ௩௰ ) ௩௰ம். அதி.

வாய்மை.

வாய்மையெனப்படுவதியாதெனின்யாதொன்றுந்
தீமையிலாதசொலல்.

* ௧ *

பொய்ம்மையும்வாய்மையிடத்தபுரைதீர்ந்த
நன்மைபயக்குமெனின்.

* ௨ *

தன்னெஞ்சறிவதுபொய்யற்கபொய்த்தபின்
றன்னெஞ்சேதன்னைச்சுடும்.

உள்ளத்தாற்பொய்யாதொழுகி னுலகத்தா
* ௫ * ருள்ளத்துளெல்லாமுளன்.

* ௬ *

மநத்தொடுவாய்மைமொழியிற்றவத்தொடு
தாநஞ்செய்வாரிற்றலை. * ஞ *

பொய்யாமையன்னபுகழில்லையெய்யாமை
யெல்லாவறமுந்தரும்.

* கா *

பொய்யாமைபொய்யாமையாற்றினறம்பிற
செய்யாமைசெய்யாமைநன்று.

* ௭ *

புறந்தூய்மைநீரானமையுமகந்தூய்மை
வாய்மையாற்காணப்படும்.

* ௮ *

எல்லாவிளக்கும்விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யாவிளக்கேவிளக்கு.

* ௬ *

யாமெய்யாக்கண்டவற்றுளில்லையெனைத்தொன்றும்
வாய்மையினல்லபிற. * ௰ * அ

௩௩.

௩௰௬. அதி. வெகுளாமை. ( ௩௰௬ )

செல்லிடத்துக்காப்பான்சினங்காப்பானல்லிடத்துக்
காக்கினென்காவாக்காலென்
* ௧ *

செல்லாவிடத்துச்சினந்தீதுசெல்லிடத்து
மில்லதனிற்றீயபிற
* ௨ *

மறத்தல்வெகுளியையார்மாட்டுந்தீய
பிறத்தலதனான்வரும்

* ௩ *

நகையுமுவகையுங்கொல்லுஞ்சினத்திற்
பகையுமுளவோபிற

* ௪ *

தன்னைத்தான்காக்கிற்சினங்காக்ககாவாக்காற்
றன்னையேகொல்லுஞ்சினம்

* ௫ *

சினமென்னுஞ்சேர்ந்தாரைக்கொல்லியினமென்னு
மேமப்புணையைச்சுடும்

* ௬ *

சினத்தைப்பொருளென்றுகொண்டவன்கேடு
நிலத்தறைந்தான்கைபிழையாதற்று

* ௭ *

இணரெரிதோய்வன்னவின்னசெயினும்
புணரின்வெகுளாமைநன்று

* ௮ *

உள்ளியவெல்லாமுடனெய்துமுள்ளத்தா
லுள்ளான்வெகுளியெனின்

* ௯ *

இறந்தாரிறந்தாரனையர்சினத்தைத்
துறந்தார்துறந்தார்துணை

* ௰ * ஆ ௩௱௰. ( ௩௰௨ )

௩௰௨ம் அதி. இன்னாசெய்யாமை.

சிறப்பீனுஞ்செல்வம்பெறினும்பிறர்க்கின்னா
செய்யாமைமாசற்றார்கோள்

* ௧ *

கறுத்தின்னாசெய்தவக்கண்ணுமறுத்தின்னா
செய்யாமைமாசற்றார்கோள்.

* ௨ *

செய்யாமற்செற்றார்க்குமின்னாதசெய்தபி
னுய்யாவிழுமந்தரும்

* ௫ *

இன்னாசெய்தாரையொறுத்தலவர்நாண
நன்னயஞ்செய் துவிடல்

* ௬ *

அறிவினானாகுவதுண்டோபிறிதினோய்
தந்நோய்போற்போற்றாக்கடை

* ௭ *

இன்னாவெனத்தானுணர்ந்தவை துன்னாமை
வேண்டும்பிறன்கட்செயல்

* ௮ *

எனைத்தானுமெஞ்ஞான்றும்யார்க்குமனத்தா
மாணாசெய்யாமைதலை

* ௯ *

தன்னுயிர்க்கின்னாமைதானறிவானென்கொலோ
மன்னுயிர்க்கின்னாசெயல்

பிறர்க்கின்னாமுற்பகற்செய்யிற்றமக்கின்னா
* ௮ * பிற்பகற்றாமேவரும்

* ௯ *

நோயெல்லாநோய்செய்தார்மேலவாநோய்செய்யார்
நோயின்மைவேண்டுபவர் * ௰ * ஆ௩௱௨௰.

௩௰௩. அதி. கொல்லாமை.

( ௩௰௩ )

அறவினையாதெனிற்கொல்லாமைகோறல்
பிறவினையெல்லாந்தரும்

* ௧ *

பகுத்துண்டுபல்லுயிரோம்புதனூலோர்
தொகுத்தவற்றுளெல்லாந்தலை * ௨ *

ஒன்றாகநல்லதுகொல்லாமைமற்றதன்
பின்சாரப்பொய்யாமைநன்று

* ௩ *

நல்லாறெனப்படுவதியாதெனின்யாதொன்றுங்
கொல்லாமைசூழுநெறி

* ௪ *

நிலையஞ்சிநீத்தாருளெல்லாங்கொலையஞ்சிக்
கொல்லாமைசூழ்வான்றலை

* ௫ *

கொல்லாமைமேற்கொண்டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லாதுயிருண்ணுங்கூற்று

* ௬ *

தன்னுயிர்நீப்பினுஞ்செய்யற்கதான்பிறி
தின்னுயிர்நீக்கும்வினை

* ௭ *

நன்றாகுமாக்கம்பெரிதெனினுஞ்சான்றோர்க்குக்
கொன்றாகுமாக்கங்கடை

* ௮ *

கொலைவினையராகியமாக்கள்புலைவினையர்
புன்மைதெரிவாரகத்து

* ௯ *

உயிருடம்பினீக்கியாரென்பர்செயிருடம்பிற்
செல்லாத்தீவாழ்க்கையவர் * ௰ *

ஆக ௩௱௩௰. ( ௩௰௪ ) ௩௰௪ம் அதி.

நிலையாமை.

நில்லாதவற்றைநிலையினவென்றுணரும்
புல்லறிவாண்மைகடை

* க *

கூத்தாட்டவைக்குழாத்தற்றேபெருஞ்செல்வம்
போக்குமதுவிளிந்தற்று

* ௨ *

அற்காவியல்பிற்றுச்செல்வமதுபெற்றா
லற்குபவாங்கேசெயல்

* ௩ *

நாளெனவொன்றுபோற்காட்டியுயிரீரும்
வாளதுணர்வார்ப்பெறின்

* ௪ *

நாச்செற்றுவிக்குண்மேல்வாராமுனல்வினை
மேற்சென்றுசெய்யப்படும்

* ௫ *

நெருநலுளனொருவனின்றில்லையென்னும்
பெருமையுடைத்திவ்வுலகு

* ௬ *

ஒருபொழுதும்வாழ்வதறியார்கருதுப
கோடியுமல்லபல

* எ *

குடம்பைதனித்தொழியப்புட்பறந்தற்றே
யுடம்பொடுயிரிடைநட்பு

* அ * உறங்குவதுபோலுஞ்சாக்காடுறங்கி
விழிப்பதுபோலும்பிறப்பு

* கூ * புக்கிலமைந்தின்றுகொல்லோவுடம்பினுட்

டுச்சிலிருந்தவுயிர்க்கு * ய *

ஆ காசம். சுரும். அதி. துறவு.

( கூ )

யாதனின்யாதனினீங்கியானோத
லதனினதனிலன்.

* க * வேண்டினுண்டாகத்துறக்கதுறந்தபி
னீண்டியற்பாலபல.

* உ *

அடல்வேண்டுமைந்தன்புலத்தைவிடல்வேண்டும்
வேண்டியவெல்லாமொருங்கு.

* ௩ *

இயல்பாகுநோன்பிற்கொன்றின்மையுடைமை
மயலாகுமற்றும்பெயர்த்து.

* ௪ *

மற்றுந்தொடர்ப்பாடெவன்கொல்பிறப்பறுக்க
லுற்றார்க்குடம்புமிகை.

* ௫ *

யானெனதென்னுஞ்செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும்.

* ௬ *

பற்றிவிடா அவிடும்பைகள்பற்றினைப்
பற்றிவிடா அதவர்க்கு. * எ *

தலைப்பட்டார்தீரத்துறந்தார்மயங்கி
வலைப்பட்டார்மற்றையவர்.

* அ *

பற்றற்றகண்ணேபிறப்பறுக்குமற்று
நிலையாமைகாணப்படும்.

* கூ * பற்றுகபற்றற்றான்பற்றினைப்பற்றைப்
பற்றுகபற்றுவிடற்கு. * ய * அ௲

௩௱௫௰. ( ௩௰௬ ) ௩௰௬ம். அதி.

மெய்யுணர்தல்.

பொருளல்லவற்றைப்பொருளென்றுணரு
மருளானுமாணாப்பிறப்பு.

* க * இருணீங்கியின்பம்பயக்குமருணீங்கி
மாசறுகாட்சியவர்க்கு

ஐயத்தினீங்கித்தெளிந்தார்க்குவையத்தின்
* ௨ * வானநணிய துடைத்து

* ௩ *

ஐயுணர்வெய்தியக்கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு.

* ௪ *

எப்பொருளெத்தன்மைத்தாயினுமப்பொருண்
மெய்ப்பொருள்காண்பதறிவு.

* ௫ *

கற்றீண்டுமெய்ப்பொருள்கண்டார்தலைப்படுவர்

மற்றீண்டுவாராநெறி.

* ௬ *

ஓர்த்துள்ளமுள்ள துணரினொருதலையாப்
பேர்த்துள்ளவேண்டாபிறப்பு.

* ௭ *

பிறப்பென்னும்பேதைமைநீங்கச்சிறப்பென்னுஞ்
செம்பொருள்காண்பதறிவு. *

அ *

சார்புணர்ந்துசார்புகெடவொழுகின்மற்றழித்துச்
சார்தராசார்தருநோய்.

காமம்வெகுளிமயக்கமிவைமூன்ற
* கூ * நாமங்கெடக்கெடுநோய். * ௰ *

அ௲ ௩௱௬௰.

௩௰௭ம் அதி. அவாவறுத்தல். ( ௩௰௭ )

அவாவென்பவெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றுந்
தவாஅப்பிறப்பீனும்வித்து.

* க * வேண்டுங்கால்வேண்டும்பிறவாமைமற்றது
வேண்டாமைவேண்டவரும்.
* உ *

வேண்டாமையன்னவிழுச்செல்வமீண்டில்லை
யாண்டுமஃதொப்பதில்.

* ௩ *

தூஉய்மையென்பதவாவின்மைமற்றது
வாஅய்மைவேண்டவரும்.

அற்றவரென்பாரவாவற்றார்மற்றையா
ரற்றாகவற்றதிலர்

அஞ்சுவதோருமறனேயொருவனை
வஞ்சிப்பதோருமவா.

அவாவினையாற்றவறுப்பிற்றவாவினை
தான்வேண்டுமாற்றான்வரும்.

* ௫ *

அவாவில்லார்க்கில்லாகுந் துன்பமஃதுண்டேற்
றவாஅ துமேன்மேல்வரும்.
* அ *

இன்பமிடையறாதீண்டுமவாவென்னுந்
துன்பத்துட்டுன்பங்கெடின்.

ஆராவியற்கையவாநீப்பினந் நிலையே
* கூ * போராவியற்கைதரும். *

ம * அ௲ ௲ாஎம.

---

அறவுருத்திறமுற்றும்.

( ௲மஅ ) ௲மஅம். அதி. உ௲ம்.
ஆகூழாற்றோன்றுமசைவின்மைகைப்பொருள்
போகூழாற்றோன்றுமடி
* க *

பேதைப்படுக்குமிழவூழறிவகற்று
மாகலூழுற்றக்கடை

நுண்ணிய நூல்பலகற் பினுமற் றுந் தன்
னுண்மையறிவே மிகும்.
இருவே றுலகத் தியற்கைதிருவேறு
தெள்ளியராதலும்வேறு.

நல்லவையெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ்செல்வஞ்செயற்கு.

பரியினுமாகாவாம்பாலல்லவுய்த்துச்
சொரியினும்போகாதம.

வகுத்தான் வகுத்தவகையல்லாற்கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தலரிது.

துறப்பார்மற் றுப்புரவில்லாருறற்பால
வூட்டாகழியுமெனின்.

நன்றாங்காணல்லவாக்காண்பவரன்றாங்கா
லல்லற்படுவதெவன்.

௩௰௯ம் அதி. பொருட்பால் ( ௩௮௧ )

அரசியல்

# இறைமாட்சி.



படைகுடிகூழமைச்சுநட்பரணாறு
முடையானரசருளேறு

* ௧ *

அஞ்சாமையீகையறிவூக்கமிந்நான்கு
மெஞ்சாமைவேந்தற்கியல்பு * ௨ *

தூங்காமைகல்விதுணிவுடைமையிம்மூன்று
நீங்கா நிலனாள்பவர்க்கு * ௩ *

அறனிழுக்காதல்லவைநீக்கிமறனிழுக்கா
மானமுடையதரசு * ௪ *

இயற்றலுமீட்டலுங்காத்தலுங்காத்த
வகுத்தலும்வல்லதரசு

* ரு *

காட்சிக்கெளியன்கடுஞ்சொல்லனல்லனேன்
மீக்கூறுமன்னனிலம்

* சா *

இன்சொலாலீத்தளிக்கவல்லாற்குத்தன்சொலாற்
றான்கண்டனைத்திவ்வுலகு

* எ *

முறைசெய்துகாப்பாற்றுமன்னவன்மக்கட்
கிறையென்றுவைக்கப்படும்

* அ *

செவிகைப்பச்சொற்பொறுக்கும்பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த்தங்குமுலகு

* கூ

*

கொடையளிசெங்கோல்குடியோம்பனான்கு
முடையானும்வேந்தர்க்கொளி * ௰ * ஆ௨ நாகூ௰.

( ௪௰ ) ௪௰ம் அதி. கல்வி.

கற்கசடறக்கற்பவைகற்றபி
னிற்கவதற்குத்தக
* க *

எண்ணென்பவேனையெழுத்தென்பவிவ்விரண்டுங்

கண்ணெ ன்பவாழுமுயிர்க்கு
* உ *

கண்ணுடையரென்பவர்கற்றோர்முகத்திரண்டு
புண்ணுடையர்கல்லாதவர்
* ௩ *

உவப்பத்தலைக்கூடியுள்ளப்பிரித
லனைத்தேபுலவர்தொழில்
* ௪ *

உடையார்முனில்லார்போலேக்கற்றுங்கற்றுர்
கடையரேகல்லாதவர்

* ௫ *

தொட்டனைத்தூறுமணற்கேணிமாந்தர்க்குக்
கற்றனைத்தூறுமறிவு

* ௬ *

யாதானுநாடாமாலூராமாலென்னொருவன்
சாந்துணையுங்கல்லாதவாறு

* ௭ *

ஒருமைக்கட்டான்கற்றகல்வியொருவற்
கெழுமையுமேமாப்புடைத்து

* ௮ *

தாமின்புறுவதுலகின்புறக்கண்டு
காமுறுவர்கற்றறிந்தார்

* ௯ *

கேடில்விழுச்செல்வங்கல்வியொருவற்கு
மாடல்லமற்றையவை * ௰

* ஆ சா.

௪௰௧ம் அதி,* கல்லாமை. (

௪௰௧ ) அரங்கின்றிவட்டாடியற்றே நிரம்பிய
நூலின்றிக்கோட்டிகொளல்
* ௧ *

கல்லாதான்சொற்காமுறுதன் முலையிரண்டு
மில்லாதாள்பெண்காமுற்றற்று
* ௨ *

கல்லாதவருநனிநல்லர் கற்றார்முற்
சொல்லாதிருக்கப்பெறின்

கல்லாதானொட்பங்கழியநன்றாயினுங்
கொள்ளாரறிவுடையார்.

கல்லாவொருவன்றகைமை தலைப்பெய்து
சொல்லாடச்சோர்வுபடும்.

உளரென்னுமாத்திரையரல்லாற் பயவாக்
களரனையர்கல்லாதவர்.

நுண்மாணுழைபுலமில்லா னெழினல
மண்மாண்புனைபாவையற்று.

* ந *
* ம *
* சி *
* வா *
* ய *

நல்லார்கட்பட்ட வறுமையி னின்னாதே.
கல்லார்கட்பட்ட திரு.

* அ *

மேற்பிறந்தாராயினுங்கல்லாதார் கீழ்ப்பிறந்துங்,
கற்றாரனைத்திலர்பாடு. * கூ

*

விலங்கொடுமக்களனைய ரிலங்குநூல்.
கற்றாரோடேனையவர். * ய * ௬௰. சாய

( சயஉ ) சயஉம் அதி. கேள்வி.

செல்வத்துட்செல்வஞ்செவிச்செல்வ மச்செல்வஞ்.
செல்வத்துளெல்லாந்தலை.

* க *

செவிக்குணவில்லாதபோழ்து சிறிது.
வயிற் றுக்குமீயப்படும்.

* உ * செவியுணவிற்கேள்வியுடையாரவியுணவி.

* அ *

றணங்கியகேள்வியரல்லார் வணங்கிய
வாயினராதலரிது.

* க *

செவியிற்சுவையுணராவாயுணர்வின் மாக்க
ளவியினும்வாழினுமென். * ம *

சஉ0.

சயநம் அறி. அறிவுடைமை. ( சமக
)

அறிவற்றங்காக்குங்கருவிசெறுவார்க்கு
முள்ளழிக்கலாகாவரண்.

* கு *

சென்றவிடத்தாற்செலவிடாதீதொரீஇ
நன்றின்பாலுய்ப்பதறிவு.
* உ *

எப்பொருள்யார்யார்வாய்க்கேட்பினுமப்பொருண்
மெய்ப்பொருள்காண்பதறிவு. *

ந *

எண்பொருளவாகச்செலச்சொல்லித்தான்பிறர்வாய்
நுண்பொருள்காண்பதறிவு

* ச * உலகந்தழீஇயதொட்பமலர்தலுங்
கூம்பலுமில்லதறிவு
* ரு *

எவ்வதுறைவதுலகமுலகத்தோ
டவ்வதுறைவதறிவு * சா *

அறிவுடையாராவதறிவாரறிவிலா
ரஃதறிகல்லாதவர்
* எ *

அஞ்சுவதஞ்சாமைபேதைமையஞ்சுவ
தஞ்சலறிவார்தொழில்

எதிரதாக்காக்குமறிவினார்க்கில்லை
* ௮ * யதிரவருவதோர்நோய்

* ௯ *

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடையரேனுமிலர் * ௰ * ஆக ௪௱௩௰.

[illegible]
[illegible]

( ௪௰௪ ) ௪௰௪ம் அதி. குற்றங்கடிதல்.

செருக்குஞ்சினமுஞ்சிறுமையு மில்லார்.
பெருக்கம்பெருமிதநீர்த்து.

இவறலுமாண்பிறந்தமாநமுமாணா
* ௧ * வுவகையுமேதமிறைக்கு

* உ *

தினைத்துணையாங்குற்றம்வரினும் பனைத்துணையாக்.
கொள்வர்பழிநாணுவார். *

௩ * குற்றமேகாக்கபொருளாகக் குற்றமே.
யற்றந்தரூஉம்பகை

* ௪ *

வருமுன்னர்க்காவாதான்வாழ்க்கை யெரிமுன்னர்.
வைத்தூறுபோலக்கெடும். *

௫ * தன்குற்றநீக்கிப்பிறர்குற்றங்காண்கிற்பின்
னென்குற்றமாகுமிறைக்கு

* ௬ *. செயற்பாலசெய்யாதிவறியான்செல்வ
முயற்பாலதன்றிக்கெடும்

* ௭ *

பற்றுள்ளமென்னுமிவறன்மையெற்றுள்ளு
மெண்ணப்படுவதொன்றன்று

அறனறிந்துமூத்தவறிவுடையார்கேண்மை
திறனறிந்துதேர்ந்துகொளல்.

* க *

உற்றநோய்நீக்கியுறாஅமைமுற்காக்கும்
பெற்றியார்ப்பேணிக்கொளல்.

அரியவற்றுளெல்லாமரிதேபெரியாரைப்
பேணித்தமராக்கொளல்.

தம்மிற்பெரியார்தமராவொழுகுதல்
வன்மையுளெல்லாந்தலை.

சூழ்வார்கண்ணாகவொழுகலான்மன்னவன்
சூழ்வாரைச்சூழ்ந்துகொளல்

  

  

தக்காரினத்தனாய்த்தானொழுகவல்லானைச்
செற்றார்செயக்கிடந்ததில்.

* ௬ *

இடிக்குந் துணையாரையாள்வாரையாரே
கெடுக்குந்தகைமையவர்.

* ௭ *

இடிப்பாரையில்லாதவேமராமன்னன்

கெடுப்பாரிலானுங்கெடும்.

* அ *

முதலிலார்க்கூதியமில்லைமதலையாஞ்
சார்பிலார்க்கில்லைநிலை.

* கூ *

பல்லார்பகைகொளலிற்பத்தடுத்ததீமைத்தே
தல்லார்தொடர்கைவிடல். * ௰ * ஆக ௪௱௫௰.

( ௪௰௬ ) ௪௰௬ம். அதி. சிற்றினஞ்சேராமை.

சிற்றினமஞ்சும்பெருமைசிறுமைதான்
சுற்றமாச்சூழ்ந்துவிடும்.

* க *

நிலத்தியல்பானீர்திரிந்தற்றாகுமாந்தர்க்
கினத்தியல்பதாகுமறிவு.

மனத்தானாமாந்தர்க்குணர்ச்சியினத்தானா
* ௨ * மின்னானெனப்படுஞ்சொல்.

* ௩ *

மனத்துளதுபோலக்காட்டியொருவற்
கினத்துளதாகுமறிவு

* ௪ * மனந்தூய்மைசெய்வினைதூய்மையிரண்டு

மினந்தூய்மைதூவாவரும்

* ௫ *

மனந்தூயார்க்கெச்சநன்றாகுமினந்தூயார்க்
கில்லைநன்றாகாவினை.

* ௬ *

மனநலமன்னுயிர்க்காக்கமினநல
மெல்லாப்புகழுந்தரும்.

* ௭ *

மனநலநன்குடையராயினுஞ்சான்றோர்க்
கினநலமேமாப்புடைத்து.

* ௮ *

மனநலத்தினாகுமறுமைமற்றஃது
மினநலத்தினேமாப்புடைத்து.

* ௯ *

நல்லினத்தினூங்குத்துணையில்லைத்தீயினத்தி
னல்லற்படுப்பதூஉமில். * ௰ * ஆ சாசுய.

௪௰௭ம் அதி. தெரிந்துசெயல்வகை. (௪௰ன)

அழிவதூஉமாவதூஉமாகிவழிபயக்கு
மூதியமுஞ்சூழ்ந்துசெயல்

* ௧ *

## ளஙு அதி. நல்குரவு. ( ளஙு )

இன்மையினின்னாததியாதெனினின்மையி
னின்மையேயின்னாதது.
* க *

இன்மையெனவொருபாவிமறுமையு
மிம்மையுமின்றிவரும்.

* உ *

தொல்வரவுந்தோலுங்கெடுக்குந்தொகையாக
நல்குரவென்னுநசை.
* ங *

இற்பிறந்தார்கண்ணேயுமின்மையிளிவந்த
சொற்பிறக்குஞ்சோர்வுதரும்.
* ச *

நல்குரவென்னுமிடும்பையுட்பல்குரைத்
துன்பங்கள்சென்றுபடும்.

* ௫ *

நற்பொருணன்குணர்ந்துசொல்லினுநல்கூர்ந்தார்
சொற்பொருள்சோர்வுபடும்.

* ௬ *

அறஞ்சாராநல்குரவீன்றதாயானும்
பிறன்போலநோக்கப்படும்.

* ௭ *

இன்றும்வருவதுகொல்லோநெருநலுங்
கொன்றதுபோலுநிரப்பு.

* ௮ *

நெருப்பினுட்டுஞ்சலுமாகுநிரப்பினுள்
யாதொன்றுங்கண்பாடரிது.

* ௯ *

துப்புரவில்லார்துவரத்துறவாமை
யுப்பிற்குங்காடிக்குங்கூற்று.

( ராக ). ராகம் அறி. இரவு.

இரக்கவிரத்தக்கார்க்காணிற்கரப்பி
னவர்பழிதம்பழியன்று

இன்பமொருவற்கிரத்தலிரந்தவை
துன்பமுறூஉவரின்.

கரப்பிலாநெஞ்சிற்கடனறிவார்முன்னின்
றிரப்புமோரேஎருடைத்து.

இரத்தலுமீதலேபோலுங்கரத்தல்
கனவிலுந்தேற்றாதார்மாட்டு.

கரப்பிலார்வையகத்துண்மையாற்கண்ணின்
றிரப்பவர்மேற்கொள்வது.

* ரு *

கரப்பிடும்பையில்லாரைக்காணினிரப்பிடும்பை

யெல்லாமொருங்குகெடும்.

* கா *

இகழ்ந்தெள்ளாதீவாரைக்காணின்மகிழ்ந்துள்ள
முள்ளுளுவப்பதுடைத்து

* எ *

இரப்பாரையில்லாயினீர்ங்கண்மாஞால
மரப்பாவைசென்றுவந்தற்று.

* அ *

ஈவார்கணென்னுண்டாந்தோற்றமிரந்துகொண்
மேவாரிலாஅக்கடை.

* கூ *

இரப்பான்வெகுளாமைவேண்டுநிரப்பிடும்பை
தானேயுஞ்சாலுங்கரி.

* ம *

அடை தீகாய.

* க *

* உ *

* ரு *

* ரு *

தெண்ணீரடுபுற்கையாயினுந்தாடற்த
ருண்ணலினுங்கினியதில்.

* ௬ *

ஆவிற்குநீரென்றிரப்பினுநாவிற்
கிரவினிளிவந்ததில்.
* ௭ *

இரப்பனிரப்பாரையெல்லாமிரப்பிற்
கரப்பாரிரவன்மினென்று
* ௭ *

இரவென்னுமேமாப்பிரோணிகாவென்னும்
பார்தாக்கப்புக்குவிடும்.

* அ *

இரவுள்ளவுள்ளமுருகுங்காவுள்ள
வுள்ளதூஉமின்றிக்கெடும்.

* ௯ *

காப்பவர்க்கியாங்கொளிக்குங்கொல்லோவிரப்பவர்
சொல்லாடப்போஒமுயிர்: * ௰ * ஆ. ௲௰.

( ௱அ ) ௱அம் அதி. கயமை.

மக்களேபோல்வர்கயவரவரன்ன
வொப்பாரியாங்கண்டதில்.

நன்றறிவாரிற்கயவர்திருவுடையர்
நெஞ்சத்தவலமிலர்.

தேவரனையர்கயவரவருந்தா
மேவனசெய்தொழுகலான்.

அகப்பட்டியாவாரைக்காணினவரின்
மிகப்பட்டுச்செம்மாக்குங்கீழ்.

அச்சமேகீழ்களதாசாரமெச்ச

மவாவுண்டேனுண்டாஞ்சிறிது.

அறைபறையன்னர்கயவர்தாங்கேட்ட
மறைபிறர்க்குய்த்துரைக்கலான்.

ஈர்ங்கைவிதிரார்கயவர்கொடிறுடைக்குங்
கூன்கையரல்லாதவர்க்கு.

* எ *

சொல்லப்பயன்படுவர்சான்றோர்கரும்புபோற்
கொல்லப்பயன்படுங்கீழ்.

உடுப்பதூஉமுண்பதூஉங்காணிற்பிறர்மேல்
* அ * வடுக்காணவற்றாகுங்கீழ்.

* கூ * என்றிற்குரியர்கயவரொன்றுற்றக்கால்
விற்றற்குரியர்விரைந்து. * ய * ஆ.

கூஅய.

பொருட்பான்முற்றிற்றுமுற்றும்.

———0———

* ௧ *

* ௨ *

* ௩ *
* ௪ *
* ௫ *

* ௬ *

௱௯ம் அதி. காமத்துப்பால்.

( ௱௯ )

# தகையணங்குறுத்தல்.

---

அணங்குகொலாய்மயில்கொல்லோகனங்குழை
மாதர்கொன்மாலுமென்னெஞ்சு.

* ௧ *

நோக்கினாணோக்கெதிர்நோக்குதறாக்கணங்கு
தானைக்கொண்டன்ன துடைத்து.

* ௨ *
பண்டறியேன்கூற்றென்பதனையினியறிந்தேன்
பெண்டகையாற்பேரமர்க்கட்டு.
* ௩ * கண்டாருயிருண்ணுந்

தோற்றத்தாற்பெண்டகைப்
பேதைக்கமர்த்தன கண்.

* ௪ * கூற்றமோகண்ணோபிணையோமடவர
னோக்கமிம்மூன்று முடைத்து.

* ௫ *

கொடும்புருவங்கோடாமறைப்பினடுங்கஞர்
செய்யலமன்னிவள்கண்.

* ௬ *
கடாஅக்களிற்றின்மேற்கட்படாமாதர்
படாஅமுலைமேற்றுகில்.

* எ *

ஒண்ணுதற்கோஒவுடைந்ததேஞாட்பினு
ணண்ணாருமுட்குமென்பீடு.

* அ *

பிணையேர்மடநோக்குநாணுமுடையாட்
கணியெவனோவேதிலதந்து.

* கூ *

உண்டார்கணல்லதடுநறாக்காமம்போற்
கண்டார்மகிழ்செய்தலின்று.

௰ * ஆக ௲கூ௰

( ௱௰ ) ௱௰ம் அதி. குறிப்பறிதல்.

இருநோக்கிவளுண்கணுள்ளதொருநோக்கு
நோய்நோக்கொன்றந்நோய்மருந்து.

* க *

கண்களவுகொள்ளுஞ்சிறுநோக்கங்காமத்திற்
செம்பாகமன்றுபெரிது.

* உ *

நோக்கிஞனேக்கியிறைஞ்சினளஃதவள்.
யாப்பினுவ ட்டியநீர்.

* ௩ * யானோக்குங்காலநிலனேக்குநோக்காக்காற்
ஞனேக் கிமெல்லநகும்.

* ௪ *

குறிக்கொண்டுநோக்காமைபல்லாலொருகண்
சிறக்கணித்தாள்போலநகும்

* ௫ *

உருஅதவர்போற்சொலினுஞ்செருஅர்சொ
லொல்லையுணரப்படும்

* ௬ *

செருஅச்சிறுசொல்லுஞ்செற்ருர்போனேக்கு
முருஅர்போன்றுற்ருர்குறிப்பு

* ௭ *

பிணிக்குமருந்துபிறமனணியிழை
＊ ௧ ＊ தன்னோய்க்குத்தானேமருந்து

＊ ௨ ＊

தாம்வீழ்வார்மென்றோட்டுயிலினினிதுகொ
ற்றாமரைக்கண்ணானுலகு

＊ ௩ ＊

நீங்கிற்றெறூஉங்குறுகுங்காற்றண்ணென்னுந்
தீயாண்டுப்பெற்றாளிவள்

வேட்டபொழுதினவையவைபோலுமே
＊ ௪ ＊ தோட்டார்கதுப்பினாடோள்

＊ ௫ ＊

உறுதோறுயிர்தளிர்ப்பத்தீண்டலாற்பேதைக்
கமிழ்தினியன்றனதோள்

＊ ௬ ＊

தம்மிலிருந் துதம துபாத் துண்டற்றா
லம்மாவரிவைமுயக்கு

வீழுமிருவர்க்கினிதேவளியிடை
போழப்படாஅமுயக்கு

ஊடலுணர்தல்புணர்தலிவைகாமங்
கூடியார்பெற்றபயன்

அறிதோறறியாமைகண்டற்றாற்காமஞ்
செறிதோறுஞ்சேயிழைமாட்டு

 ஏ 

* க * மலர்காணின்மையாத்திநெஞ்சேயிவள்கண்
பலர்காணும்பூவொக்குமென்று

* உ *

முறிமேனிமுத்தமுறுவல்வெறிநாற்றம்
வேலுண்கண்வேய்த்தோளவட்கு

காணிற்குவளைகவிழ்ந்துநிலனோக்கு
* ௩ * மாணிழைகண்ணொவ்வேமென்று

* ௪ *

அனிச்சப்பூக்கால்களையாள்பெய்தாணுசுப்பிற்கு
நல்லபடாஅபறை

மதியுமடந்தைமுகனுமறியா
* ௫ * பதியிற்கலங்கியமீன்

அறுவாய் நிறைந்தவவிர்மதிக்குப்போல
* ௬ * மறுவுண்டோமாதர்முகத்து

* ௭ *

மாதர்முகம்போலொளிவிடவல்லையேற்
காதலைவாழிமதி

மலரன்னகண்ணாண்முகமொத்தியாயிற்
* ௮ * பலர்காணத்தோன்றன்மதி

* கூ *

அனிச்சமுமன்னத்தின்றூவியுமாத
ரடிக்குநெருஞ்சிப்பழம் * ௰ *

ஆ௨ தா௨௰.
௱௰௩ம் அதி. காதற்சிறப்புரைத்தல். ( ௱௰௩ )

பாலொடுதேன்கலந்தற்றேபணிமொழி
வாலெயிறூறியநீர்
* ௧ * உடம்பொடுயிரிடையென்னமற்றன்ன
மடந் தையொடெம்மிடைந ட்பு .
* ௨ *

கருமணியிற்பாவாய்நீபோதாயாம்வீழுந்
திருநுதற்கில்லையிடம்.

வாழ்தலுயிர்க்கன்னளாயிழைசாத

* ௩ *

லதற்கன்னணீங்குமிடத்து

* ௪ * உள்ளுவன்மன்யான்மறப்பின்மறப்பறியே
னொள்ளமர் க்கண்ணா ள்கு ண ம் .

* ௫ *

கண்ணுள்ளிற்போகாரிமைப்பிற்பருவரார்
நுண்ணியரெங்காதலவர.

* ௬ * கண்ணுள்ளார்காதலவராகக்கண்ணு
மெழுதே ங்கரப்பாக்கறிந்து.

* ௭ *

நெஞ்சத்தார்காதலவராகவெய்துண்ட
லஞ்சுதும்வேபாக்கறிந்து.

* ௮ *

இமைப்பிற்கரப்பாக்கறிவலனைத்திற்கே
யேதிலரென் னு மிவ்வூர் .

* கூ * உவந் துறைவருள்ளத் துளென் றுமிகந்
துறைவ
ரேதிலரொன் னுமிவ்வூர். * ௰ *
அ௳ தூாஙய.
( ஙயச ) ஙயசம் அதி.
நாணுத் துறவுரைத்தல்.

காமமுழந் துவருந் திருர்க்கேம
ம்டலல்லதில்லைவலி.

* க *
'நோனுவுடம்புமுயிருமடலேறு
நாணினைநீக்கிநிறுத் து .
* உ * நாணொடுநல்லாண்மைபண்டுடையேனின்
றுடையேன்
காமுற்றுரோறு ம டல்.

* ங *
காமக்கடும்புனலுய்க்குமேநாணொடு
நல்லாண்மையென் னும்புணை.

* ச *

தொடலைக்குறுந்தொடிதந்தாண்மடலொடு
மாலையுழக்குந் துயர்.

* ௫ *

மடலூர்தல்யாமத்துமுள்ளுவேன்மன்ற
படலொல்லாபேதைக்கென்கண்.

கடலன்னகாமமுழந்துமடலேறாப்
பெண்ணிற்பெருந்தக்கதில்.

நிறையரியர்மன்னளியரென்னாதுகாமம்
மறையிறந்துமன்றுபடும்.

அறிகிலாரெல்லாருமென்றேயென்காமம்
மறுகின்மறுகுமருண்டு.

யாங்கண்ணிற்காணநகுபவறிவில்லார்
யாம்பட்டதாம்படாவாறு. * ௬ *

## ௱௰௫ம் அதி. அலரறிவுறுத்தல்.

அலரொழவாருயிர்நிற்குமதனைப்
பலரறியார்பாக்கியத்தால்.

மலரன்னகண்ணாளருமையறியா
தலரெமக்கீந்ததிவ்வூர்.

உறாஅதோவூரறிந்தகௌவையதனைப்
பெறாஅதுபெற்றன்னநீர்த்து.

கவ்வையாற்கவ்விதுகாமமதுவின்றேற்
றவ்வென்னுந்தன்மையிழந்து.

களித்தொறுங்கள்ளுண்டல்வேட்டற்றாற்காமம்
வெளிப்படுந்தோறுமினிது.

* ௫ * கண்டதுமன்னுமொருநாளலர்மன்னுந்
திங்களைப்பாம்புகொண்டற்று.
* ௬ *
ஊரவர்கௌவைபெருவாகவன்னைசொன்
னீராகநீளுமிந்நோய்.
* ௭ *

நெய்யாலெரிநுதுப்பேமென்றற்றாற்கௌவையாற்
காமநுதுப்பேமெனல்.
* ௮ * அலர்நாணவொல்வதோ

வஞ்சலோம்பென்றார் பலர்நாணநீத்தக்கடை.
* ௯ *
தாம்வேண்டினல்குவர்காதலர்யாம்வேண்டுங்
கௌவையெடுக்குமிவ்வூர். * ௰ * அதி
காரிம.

( ாமுரு )

* ௧ *

* ௨ *

* ௩ *
* ௪ *

( ௱௰௬ ) . ௱௰௬ம் அதி. பிரிவாற்றாமை.

செல்லாமையுண்டேலெனக்குரைமற்றுநின்
வல்வ ரவுவாழ்வார்க்குரை.

* ௧ * இன்கணுடைத்தவர்பார்வல்பிரிவஞ்சும்
புன் கணுடைத்தாற்புண ர்வு .

* ௨ *

அரிதரோதேற்றமறிவுடையார்கண்ணும்
பிரிவோ ரிடத்து ண்மையான்.

* ௩ *

அளித்தஞ்சலென்றவர்நீப்பிற்றெளித்தசொற்
றேறியார்க்குண்டோதவறு.

* ௪ * ஓம்பினமைந்தார்பிரிவோம்பன்மற்றவர்
நீங்கினரிதாற்புணர்வு.

* ௫ *

பிரிவுரைக்கும்வன்கண்ணராயினரிதவர்
நல்குவரென்னுநசை.

* சா *

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்றவளை.

* எ *

இன்னாது இனனில் ஊர்வாழ்தல் அதனினு
மின்னா தினியார்ப்பிரிவு.

* அ *

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுடலாற்றுமோ தீ.

* கூ *

அரிதாற்றி யல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

* ய * ஆ. ஞானம்.

ளயஎ அதி. படர்மெலிந்திரங்கல். (ளயஎ)

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.

* க *

கரத்தலுமாற்றேனிந்நோயைநோய்செய்தார்க்
குரைத்தலுநாணுத்தரும்.
* உ *

காமமுநாணுமுயிர்காவாத்தூங்குமென்
னோனாவுடம்பினகத்து.

* ௩ *
காமக்கடன்மன்னுமுண்டேயதுநீந்து
மேமப்புணைமன்னுமில்.
* ௪ *

துப்பினெவனாவர்மற்கொறுயர்வரவு
நட்பினுள்ளாற்றுபவர்.

* ௫ *
இன்பங்கடன்மற்றுக்காமமஃதடுங்காற்
றுன்பமதனிற்பெரிது.
* ௬ *

காமக்கடும்புனனீந்திக்கரைகாணேன்
யாமத்தும்யானேயுளேன்.
* ௭ *

மன்னுயிரெல்லாந் துயிற்றியளித்திரா
வென்னல்லதில்லை துணை.
* அ *

கொடியார்கொடுமையிற்றாங்கொடியவிந்நா
ணெடியகழியுமிரா.
* கூ *
உள்ளம்போன்றுள்வழிச்செல்கற்பின்வெள்ளநீர்
நீந்தலமன்னோவென்கண். ௰ * அதி

காரம். ( ௱௰அ ) ௱௰அம் அதி.

கண்விதுப்பழிதல்.

கண்டாங்கலுழ்வதெவன்கொலோதண்டாநோய்
தாங்காட்டயாங்கண்டது.
* க *
தெரிந்துணராநோக்கியவுண்கண்பரிந்துணராப்
பைதலுழப்பதெவன்.
* உ *

கதுமெனத்தாநோக்கித்தாமேகலுழு
மிதுநகத்தக்கதுடைத்து.

பெயலாற்றுநீருலந்தவுண்கணுயலாற்று
வுய்விநோயென்கணிறுத்து.

படலாற்றுபைதலுழக்குங்கடலாற்றுக்
காமநோய்செய்தவென்கண்.

ஓஒவினிதேயெமக்கிந்நோய்செய்தகண்
டாஅமிதற்பட்டது.

உழந்துழந்துண்ணீரறுகவிழைந்திழைந்து
வேண்டியவர்க்கண்டகண்.

* எ * பேணாதுபெட்டாருளர்மன்னோமற்றவர்க்
காணாதமைவிலகண்.

* அ *

வாராக்கால்துஞ்சாவரிற்றுஞ்சாவாயிடை
யாரஞருற்றனகண்.

* கூ *

மறைபெறலூரார்க்கரிதன்றாலெம்போ
லறைபறைகண்ணாரகத்து. * ௰ * ஆ. நா௮௰.

* ௲ *
* ௬ *

* ௱ *
* ௲ *

௱௰௯ம் அதி. பசப்புறுபருவரல்.

(௱௰௧)

நயந்தவர்க்குநல்காமைநேர்ந்தேன்பசந்தவென்
பண்பியார்க்குரைக்கோபிற.

* ௧ *

அவர்தந்தாரென்னுந்தகையாலிவர்தந்தென்
மேனிமேலூரும்பசப்பு.

* ௨ *

சாயலு நாணுமவர்கொண்டார்கைம்மாறு
நோயும்பசலையுந்தந்து.

* ௩ *

உள்ளுவன்மன்யானுரைப்பதவர்திறமாற்
கள்ளம்பிறவோபசப்பு.

* ௪ *

உவக்காணெங்காதலர்செல்வாரிவக்காணென்
மேனிபசப்பூர்வது.

* ௫ *

விளக்கற்றம்பார்க்குமிருளேபோற்கொண்கன்
முயக்கற்றம்பார்க்கும்பசப்பு

* ௬ *

புல்லிக்கிடந்தேன்புடைபெயர்ந்தேனவ்வளவி
லள்ளிக்கொள்வற்றேபசப்பு.

* எ * பசந்தாளிவளென்பதல்லாலிவளைத்
துறந்தாரவரென்பாரில்.

* அ *

பசக்கமற்பட்டாங்கென்மேனிநயப்பித்தார்
நன்னிலையாரவரெனின்.

* கூ *

பசப்பெனப்பேர்பெறுதனன்றேநயப்பித்தார்

நல்காமைதூற்றாரெனின். * ய * அதி-

காரம்

(௱௨௰) ௱௨௰ம் அதி· தனிப்படர்மிகுதி.

தாம்வீழ்வார்தம்வீழப்பெற்றவர்பெற்றாரே
காமத்துக்காழில்கனி.
* க *

வாழ்வார்க்குவானம்பயந்தற்றால்வீழ்வார்க்கு
வீழ்வாரளிக்குமளி.

* ௨ *

வீழுநர்வீழப்படுவார்க்கமையுமே
வாழுநமென்னுஞ்செருக்கு.

* ௩ *

வீழப்படுவார்கெழீஇயிலர்தாம்வீழ்வார்
வீழப்படாஅரெனின்.

* ௪ *

நாங்காதல்கொண்டார்நமக்கெவன்செய்பவோ
தாங்காதல்கொள்ளாக்கடை.

* ௫ *

ஒருதலையானின்னாதுகாமங்காப்போல
இருதலையானுமினிது.

பருவரலும்பைதலுங்காணான்கொல்காமன்
ஒருவர்கணின்றொழுகுவான்.

வீழ்வாரினின்சொற்பெறாஅதுலகத்து
வாழ்வாரின்வன்கணாரில்.

நசைஇயார்நல்காரெனினுமவர்மாட்
டிசையுமினியசெவிக்கு.

உறாஅர்க்குறுநோயுரைப்பாய்கடலைச்
செறாஅஅய்வாழியநெஞ்சு * ௰ *

* ஸ்ரீ *

ஸ்ரீ ௲௨௱.

௱௨௧ம். அதி. நினைந்தவர்புலம்பல் (௱௨௧)

உள்ளினுந்தீராப்பெருமகிழ்செய்தலாற்
கள்ளினுங்காமமினிது.

* ௧ *

எனைத்தொன்றினிதேகாண்காமந்தாம்வீழ்வார்
நினைப்பவருவதொன்றில்.

* ௨ *

நினைப்பவர்போன்றுநினையார்கொறும்மல்
சினைப்பதுபோன்றுகெடும்.

* ௩ *

யாமுமுளேங்கொலவர்நெஞ்சத்தெந்நெஞ்சத்
தோஒவுளரேயவர்.

* ௪ *

தந்நெஞ்சத்தெம்மைக்கடிகொண்டார்நாணார்கொ
லெந்நெஞ்சத்தோவாவரல்.

* ௫ *

மற்றியானென்னுளேன்மன்னோவவரொடியா
னுற்றநாளுள்ளவுளேன்.

* ௬ *

மறப்பினெவனாவன்மற்கொன்மறப்பறியே
னுள்ளினுமுள்ள ஞ்சுடும் .

* ௭ *

எனைத்துநினைப்பினுங்காயாரனைத்தன்றோ
காதலர்செய்யுஞ்சிறப்பு.

* ௮ *

விளியுமெனின்னுயிர்வேறல்லமென்பா

ளியின்மையாற்றநினைந்து.

* ௯ * விடாஅது சென்றாக்கண்ணிறற்காணப் படாஅதிவாழிமதி. * ௰ * ஆ௨. ௲௨௱௰.

(௱௨௨) ௱௨௨ம். அதி.

கனவுநிலையுரைத்தல்

காதலர்தூதொடுவந்தகனவினுக்
கியாதுசெய்வேன்கொல்விருந்து.

* ௧ *

கயலுண்கண்யானிரப்பத்துஞ்சிற்கலந்தார்க்
குயவுண்மைசாற்றுவேன்மன்.

* ௨ *

நனவினால்காதவரைக்கனவினாற்
காண்டலினுண்டென்னுயிர்.

* ௩ *

கனவினானுண்டாகுங்காமநனவினா
னல்காரைநாடித்தார்க்கு.

* ௪ * நனவினாற்கண்டதூஉமாங்கேகனவுந்தான்
கண்டபொழுதேயினிது.

* ௬ *

நனவெனவொன்றில்லையாயிற்கனவினாற்
காதலர்நீங்கலர்மன்.

நனவினானல்காக்கொடியார்கனவினா
* ௭ * னென்னெம்மைப்பீழிப்பது.

* ௮ *

துஞ்சுங்காற்றோண்மேலராகிவிழிக்குங்கா
னெஞ்சத்தராவர்விரைந்து.

நனவினானல்காரைநோவர்கனவினாற்
* ௯ * காதலர்க்காணாதவர்.

* ௰ *

நனவினானந்நீத்தாரென்பர்கனவினாற்
காணார்கொலிவ்வூரவர். * ௰ *

[illegible]. ௲௨௱௨௰.

௱௨௩ம் அதி. பொழுதுகண்டிரங்கல். (௱௨௩)

மாலைபோவல்லைமணந்தாருயிருண்ணும்
வேலைநீவாழிபொழுது.

* ௧ *
புன்கண்ணைவாழிமருண்மாலையெங்கேள்போல்
வன் க ண்ணதோநின் றுணை .
* ௨ *

பனியரும்பிப்பைதல்கொண்மாலை துனியரும்பித்
துன்பம்வளரவரும்.

* ௩ *
காதலரில்வழிமாலைகொலைக்களத்
தேதிலர்போலவரும்.
* ௪ * காலைக்குச்செய்தநன்றென்கொலெவன்
கொல்யான்
மாலைக்குச்செய்தபகை.
* ௫ *

மாலைநோய்செய்தல்மணந்தாரகலாத
காலையறிந்ததிலேன்.

காலையரும்பிப்பகலெல்லாம்போதாகி
மாலைமலருமிந்நோய்.

அழல்போலுமாலைக்குத்தூதாகியாயன்
குழல்போலுங்கொல்லும்படை.

பதிமருண்டுபைதலுழக்குமதிமருண்டு
மாலைபடர்தரும்போழ்து.





* எ *

* அ *

* ஞ *

பொருண்மாலையாளரையுள்ளிமருண்மாலை
மாயுமென்மாயாவுயிர். * ௰ * ஆ.

ஆஉ௱கூய.

( ௱௨௪ ) ௱௨௪ம் அதி. உறுப்புநலனழிதல்.

சிறுமைநமக்கொழியச்சேட்சென்றார்உள்ளி
நறுமலர்நாணினகண்.

* க *

நயந்தவர்நல்காமைசொல்லுவபோலும்
பசந்துபனிவாருங்கண்.

* உ *

தணந்தமைசாலவறிவிப்பபோலு
மணந்தநாள்வீங்கியதோள்.

* ங *

பணைநீங்கிப்பைந்தொடிசோருந்துணைநீங்கித்
தொல்கவின்வாடியதோள்.

* ச *

கொடியார்கொடுமையுரைக்குந்தொடியொடு
தொல்கவின்வாடியதோள்.

தொடியொடுதோணெகிழநோவலவரைக்
கொடியரெனக்கூறனொந்து.

* ரு *

* ௬ *

பாடுபெறுதியோநெஞ்சேகொடியார்க்கென்
வாடுதோட்பூசலுரைத்து.

* ௭ *

முயங்கியகைகளையூக்கப்பசந்தது
பைந்தொடிப்பேதைநுதல்.

* ௮ *

முயக்கிடைத்தண்வளிபோழப்பசப்புற்ற
பேதைபெருமழைக்கண்.

* ௯ *

கண்ணின்பசப்போபருவரலெய்தின்றே
யொண்ணுதல்செய்ததுகண்டு. * ௰ * ஆ. ௲௨௱௪௰.

### ௱௨௫ம் அதி. நெஞ்சொடுகிளத்தல்.

( ௱௨௫ )

நினைத்தொன்றுசொல்லாயோநெஞ்சேயெனைத்

தொன்று மெவ்வநோய்தீர்க்குமருந்து.

* க *

காதலவரிலராகநீநோவது
பேதைமைவாழியென்னெஞ்சு.

* உ *

இருந்துள்ளியென்பரிதனெஞ்சேபரிந்துள்ளல்
பைதனோய்செய்தார்கணில்.

* ங *

கண்ணுங்கொளச்சேறிநெஞ்சேயிவையென்னைத்
தின்னுமவர்க்காணலுற்று.

* ச *

செற்றாரெனக்கைவிடலுண்டோநெஞ்சேயா
முற்றாலுறாஅதவர்.

* ரு * கலந்துணர்த்து
ங்காதலர்க்கண்டாற்புலந்துணராய்
பொய்க்காய்வுகாய்தியென்னெஞ்சு.

* சு *

காமம்விடுவொன்றோநாண்விடுநன்னெஞ்சே
யானோபொறேனிவ்விரண்டு.

* எ *

பரிந்தவர்நல்காரென்றேங்கிப்பிரிந்தவர்
பின்செல்வாய்பேதையென்னெஞ்சு.

* அ * உள்ளத்தார்காதலவராகவுள்ளிநீ
யாருழைச்சேறியென்னெஞ்சு.

* கூ *

துன்னத்துறந்தாரைநெஞ்சத்துடையேமா
வின்னுமிழத்துங்கவின். * ம *

ஆடதுஉளடு

( ருஉகூ ) ருஉகூம் அதி. நிறையழிதல்.

காமக்கணிச்சியுடைக்குநிறையென்னு
நாணுத்தாழ்வீழ்த்தகதவு.

* க *

காமமெனவொன்ரோகண்ணின்றென்னெஞ்சத்தை
யாமத்துமாளுந்தொழில். *

உ *

மறைப்பேன்மற்காமத்தையாளுகுறிப்பின்றித்
தும்மல்போற்றேன்றிவிடும். * ௩ *

நிறையுடையேனென்பேன்மன்யானோவென்காம
மறையிறந்துமன்றுபடும்.

* ௪ *

செற்றார்பின்செல்லாப்பெருந்தகைமைகாமநோ
யுற்றாரறிவதொன்றன்று.

* ௫ *
செற்றவர்பின்சேறல்வேண்டியளித்தரோ

வெற்றென்னையுற்ற துயர்.
* ௬ *

நாணைவொன் றேவறியலங்காமத்தாற்
பேணியார்பெட்பசெயின்.

* எ *

பன்மாயக்கள்வன்பணிமொழியன்றோநம்
பெண்மையுடைக்கும்படை.

* அ *

புலப்பலெனச்சென்றேன்புல்லினேனெஞ்சங்
கலத்தலுறுவதுகண்டு.

* கூ *

நிணந்தீயிலிட்டன்னநெஞ்சினார்க்குண்டோ
புணர்ந்தூடிநிற்பேமெனல். *ம* ஆட. கூஉாகூம.

௱உ௯ம் அதி. அவர்வயின்விதும்பல். ( ௱உ௯
)

வாளற்றுப்புற்கென்றகண்ணுமவர்சென்ற
நாளொறறித்தேய்ந்தவீரல்.
* க *

இலங்கிழாயின்றுமறப்பினென்றேண்மேற்
கலங்கழியுங்காரிகைநீத்து.

* உ * உாளைசஇயுள்ளந்துணையாகச்சென்றூர்
வாளைசஇயின்றுமுளேன்.
* ரு *
கூடியகாமம்பிரிந்தார்வாவுள்ளிக்
கோடுகொடேறுமென்னெஞ்சு.
* சு *

காண்கமற்கொண்கனைக்கண்ணாரக்கண்டபி
னீங்குமென்மென்றேட்பசப்பு.
* ரு *.
வருகமற்கொண்கனொருநாட்பருகுவன்.
பைதனோயெல்லாங்கெட.

* சா * புலப்பேன்கொல்புல்லுவேன்

கொல்லோகலப்பேன் கொல்:
கண்ணனின் வேளிர்வரின்,

* எ *

வினைகலந் துவென்றீகவேந் தன்மனைகலந் து
மாலையயர்கம்விருந் து.

* அ *

ஒருநாளெழுநாள்போற்செல் லுஞ்சேட்சென்றார்
வருநாள்வைத்தேங்குபவர்க்கு.

* சு *

பெறிலென்னும்பெற்றக்காலென்னுறிலென்னு
முள்ளமுடைந் துக்கக்கால். * ம * ஆ தஉாஎம.

( ௲உ௮ ) ௲உ௮ம். குறிப்பறிவுறுத்தல்.

கரப்பினுங்கையிகந்தொல்லா நின் னுண்க
ணுரைக்கலுறுவதொன் றுண்டு.

* க *

கண்ணிறைந்தகாரிகைக்காம்பேர்தோட்பேதைக்குப்
பெண்ணிறைந்தநீர்மைபெரிது. *

மணியிற்றிகழ்தருநூல்போன்மடந்தை
யணியிற்றிகழ்வதொன் றுண்டு.
உ *

* ௩ *

முகைமொக்குளுள்ள துநாற்றம்போற்பேதை
நகைமொக்குளுள்ளதொன் றுண்டு.

செறிதொடிசெய்திறந்தகள்ளமுறுதுயர்
தீர்க்குமருந்தொன் றுடைத்து.
* ௪ *

* ௫ *

பெரிதாற்றிப்பெட்பக்கலத்தலரிதாற்றி
யன்பின்மைசூழ்வ துடைத்து.

தண்ணந்துறைவன்றணந்தமைநம்பினு
முன்னமுணர்ந்தவளை.
* ௬ *

* ௭ *

நெருநற்றுச்சென்றாரெங்காதலர்யாமு
மெழுநாளேமேனிபசந்து.

* ௮ *

தொடிநோக்கிமென்றோணோக்கியடிநோக்கி
யஃதாண்டவள்செய்தது.

* ௯ *

பெண்ணினாற்பெண்மையுடைத்தென்பகண்ணினாற்
காமநோய்சொல்லியிரவு. * ௰ * ௲௨௱௮௰

௱௨௯ம் அதி. புணர்ச்சிவிதும்பல்.

(௱௨௯ உள்ளக்களித்தலுங்காணமகிழ்தலுங்
கள்ளுக்கில்காமத்திற்குண்டு.
* ௧ *

தினைத்துணையுமூடாமைவேண்டும்பனைத்துணையுங்
காமநிறையவரின்.

* ௨ *

பேணாதுபெட்பவேசெய்யினுங்கொண்கனைக்
காணாதமையலகண்.

* ௩ *

ஊடற்கட்சென்றேன்மற்றோழியதுமறந்து
கூடற்கட்சென்றதென்னெஞ்சு.

* ௪ *

எழுதுங்கால்கோல்காணாக்கண்ணேபோற்கொண்கன்
பழிகாணேன்கண்டவிடத்து. *

௫ *

காணுங்காற்காணேன்றவறாயகாணாக்காற்
காணேன்றவறல்லவை.

* ௬ * உய்த்தலறிந்துபுனல்பாய்பவரேபோற்
பொய்த்தலறிந்தேன்புலந்து.

* எ *

இளித்தக்கவின்றுசெயினுங்களித்தார்க்குக்
கள்ளற்றேகள்வநின்மார்பு

மலரினுமெல்லிதுகாமஞ்சிலாதன்
* அ * செவ்விதலைப்படுவார்.

* கூ *
கண்ணிற்றுனித்தேகலங்கினள்புல்லுத
லென்னினுந்தான்விதுப்புற்று. * ய *

அ. நூஉாகய

( ாகய ) ாகயம் அதி. நெஞ்சொடுபுலத்தல்.
அவர்நெஞ்சவர்க்காதல்கண்டுமெவனெஞ்சே
நீயெமக்காகாதது.

உறாஅதவர்க்கண்டகண்ணுமவரைச்
* க * செறாரெனச்சேறியென்னெஞ்சு.

* உ *

கெட்டார்க்குநட்டாரில்லென்பதோநெஞ்சேநீ
பெட்டாங்கவர்பின்செலல்.

* ங *

இனியன்னநின்னொடுசூழ்வார்யார்நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண்மற்று.

பெறாஅமையஞ்சும்பெறிற்பிரிவஞ்சு
* ச * மறாஅவிடும்பைத்தென்னெஞ்சு.

* ரு *

தனியேயிருந்து நினைத்தக்காலென்னைத்
தினியவிருந்ததென்னெஞ்சு.

* சா * நாணுமறந்தேனவர்மறக்கல்லாவென்
மாணாமடநெஞ்சிற்பட்டு.

* ௭ *

எள்ளினிளிவாமென்றெண்ணியவர்திற
முள்ளுமுயிர்க்காதனெஞ்சு.

* ௮ *

துன்பத்திற்கியாரோ துணையாவார்தாமுடைய
நெஞ்சந் துணையல்வழி.

* ௯ *

தஞ்சந்தமரல்லரோதிலர்தாமுடைய
நெஞ்சந்தமரல்வழி. * ௰ * ௲. ௩௱.

௱௩௧ அதி. புலவி. (௱௩௧
)

புல்லாதிராஅப்புலத்தையவருறு
மல்லனோய்காண்கஞ்சிறிது.

* ௧ *

உப்பமைந்தற்றாற்புலவியதுசிறிது
மிக்கற்றானீளவிடல்.
* ௨ *
அலந்தாரையல்லனோய்செய்தற்றாற்றம்மைப்
புலந்தாரைப்புல்லாவிடல்.

* ௩ *

ஊடியவரையுணராமைவாடிய
வள்ளிமுதலரிந்தற்று
* ௪ *

நலத்தகைநல்லவர்க்கேஎர்புலத்தகை
பூவன்னகண்ணாரகத்து.
* ௫ * துனியும்புலவியுமில்லாயிற்காமங்
கனியுங்கருக்காயுமற்று.

* ௬ * ஊடலினுண்டாங்கோர்துன்பம்புணர்வது
நீடுவதன்றுகொலென்று.
* ௭ *

நோதலெவன்மற்றுநொந்தாரென்றஃதறியுங்
காதலரில்லாவழி.
* ௮ *

நீருநிழலதினிதேபுலவியும்
வீழுநர்கண்ணேயினிது.

* கூ *

ஊடலுணங்கவிடுவாரோடென்னெஞ்சங்
கூடுவேமென்பதவா * ம * அ.

திகாம்.

( ௱௩உ ) ௱௩உம் அதி. புலவிநுணுக்கம்.

பெண்ணியலாரெல்லாருங்கண்ணிற்பொதுவுண்பர்
நண்ணேன்பரத்தநின்மார்பு.

* க *

ஊடியிருந்தேமாத்தும்மினார்யாந்தம்மை
நீடுவாழ்கென்பாக்கறிந்து.

* உ *

கோட்டுப்பூச்சூடினுங்காயுமொருத்தியைக்
காட்டியசூடினீரென்று.

யாரினுங்காதலமென்றேனாஊடினாள்
யாரினும்யாரினுமென்று.

* ௩ *

இம்மைப்பிறப்பிற்பிரியலமென்றேனாக்
கண்ணிறைநீர்கொண்டனள்.

* ௪ *

* ௫ *

உள்ளினேனென்றேன்மற்றென்மறந்தீரென்றென்னைப்
புல்லாள்புலத்தக்கனள்.

* ௬

வழுத்தினாடும்மினேனாகவழித்தழுதாள்
யாருள்ளித்தும்மினீரென்று.

*

தும்முச்செறுப்பவழுதாணுமருள்ள
வெம்மைமறைத்திரோவென்று.

* ௭ *

* ௮ *

தன்னைபுணர்த்திறுங்காயும்பிறர்க்குநீ
ரீந்நீராகுதிரொன்று.

* கூ *

நினைத்திருந்துநோக்கினுங்காயுமனைத்துநீர்
யாருள்ளிநோக்கினீரென்று. * ம * ஆ. தகாஉம.

௱கூகூம் அதி. ஊடலுவகை. (௱கூகூ
)

இல்லைதவறவர்க்காயினுமூடுதல்
வல்லதவரளிக்குமாறு.

* க * ஊடலிற்றோன்றுஞ்சிறுதுனிநல்லளி
வாடினும்பாடுபெறும்.

* உ * புலத்தலிற்புத்தேணாடுண்டோநிலத்தொடு
நீரியைந்தன்னாகத்து.

* ௩ * புல்லிவிடாஅப்புலவியுட்டோன்றுமென்
னுள்ளமுடைக்கும்படை.

* ௪ *

தவறிலராயினுந் தாம்வீழ்வார்மென்றோ
ளகறலினுங்கொன்றுடைத்து.

* ௫ *
உணலினுமுண்டதறலினிதுகாமம்
புணர்தலினூடலினிது.
* ௬ *
ஊடலிற்றோற்றவர்வென்றாதுமன்னுங்
கூடலிற்காணப்படும்.

* ௭ *
ஊடிப்பெறுகுவங்கொல்லோநுதல்வெயர்ப்பக்
கூடலிற்றோன்றியவுப்பு.
* ௮ * ஊடுகமன்னோவொளியிழையாமிரப்ப
நீடுகமன்னோவிரா.
* ௯ * ஊடுதல்காமத்திற்கின்பமதற்கின்பங்
கூடிமுயங்கப்பெறின். * ௰ * அதி.
௧௩௱௩௰.

தெய்வப்புலமைத்திருவள்ளுவநாயனார்
அருளிச்செய்த
திருக்குறள்
மூலபாடமுற்றிற்றமுற்றும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அஃகாமை | ௰௮ | ௮ | அரங்கின் | ௪௧ | ௧ |
| அஃகியக | ௰௮ | ௫ | அரம்பொ | ௮௯ | ௮ |
| அங்கணத் | ௭௨ | ௰ | அரம்போ | ௱ | ௭ |
| அசையிய | ௱௰ | ௮ | அரிதரோ | ௱௰௯ | ௩ |
| அச்சமே | ௫௪ | ௪ | அரிதாற் | ௱௰௬ | ௰ |
| அச்சமே | ௱௮ | ௫ | அரியகற்று | ௫௧ | ௩ |
| அஞ்சாமைய | ௫௰ | ௭ | அரியவற் | ௪௫ | ௩ |
| அஞ்சாமையீ | ௩௯ | ௨ | அரியவென் | ௫௪ | ௭ |
| அஞ்சுமறி | ௮௭ | ௩ | அருங்கே | ௨௧ | ௰ |
| அஞ்சுவதஞ் | ௪௩ | ௮ | அருஞ்செ | ௫௭ | ௫ |
| அஞ்சுவதோரு | ௩௭ | ௬ | அருட்செ | ௨௫ | ௧ |
| அடக்கம | ௰௩ | ௧ | அரும்பய | ௨௰ | ௮ |
| அடல்வே | ௩௫ | ௩ | அருமறை | ௮௫ | ௭ |
| அடற்ற | ௭௭ | ௮ | அருமையு | ௬௨ | ௧ |
| அடுக்கிய | ௯௬ | ௪ | அருவினை | ௪௯ | ௩ |
| அடுக்கிவரி | ௬௩ | ௫ | அருளல்ல | ௨௬ | ௪ |
| அடுத்தது | ௭௧ | ௬ | அருளில்லா | ௨௫ | ௭ |
| அணங்கு | ௱௯ | ௧ | அருவென் | ௭௯ | ௭ |

( ௨ )

அதி. குற. அதி. குற.

அதி. குற. அதி. குற.

| | அதி. | குற. |
|---|---|---|
| துப்புரவில் | ௱௫ | ௰ |
| தும்முச் | ௱௩௨ | ௮ |
| துளியின் | ௫௬ | ௭ |
| துறந்தாரிற் | ௰௬ | ௯ |
| துறந்தார்க்குத் | ௨௭ | ௩ |
| துறந்தார்க்குந் | ௫ | ௨ |
| துறந்தார்ப | ௫௯ | ௬ |
| துறந்தார்பெரு | ௩ | ௨ |
| துறப்பார் | ௩௮ | ௮ |
| துறைவன் | ௱௰௬ | ௭ |
| துனியும் | ௱௩௧ | ௬ |
| துன்பத்து | ௱௩௰ | ௯ |
| துன்பமு | ௬௭ | ௯ |
| துன்புறூஉ | ௰ | ௪ |
| துன்னார் | ௱௨௫ | ௰ |
| துன்னியார் | ௰௯ | ௮ |
| தூங்காமை | ௩௯ | ௩ |
| தூங்குக | ௬௮ | ௨ |
| தூஉய்மை | ௩௭ | ௪ |
| தூய்மை | ௬௯ | ௮ |
| தெண்ணீர் | ௱௭ | ௫ |
| தெய்வத்தா | ௬௨ | ௯ |
| தெய்வந் | ௬ | ௫ |
| தெரிதலுந் | ௬௪ | ௪ |
| தெரிந்த | ௪௭ | ௨ |
| தெரிந்து | ௱௰௮ | ௨ |
| தெருளா | ௨௫ | ௯ |
| தெளிவில | ௪௭ | ௫ |
| தென்புல | ௫ | ௩ |
| தேரான்பிற | ௫௧ | ௮ |
| தேரான்றெ | ௫௧ | ௰ |
| தேவரனை | ௱௮ | ௩ |

| | அதி. | குற. |
|---|---|---|
| தொகச்சொ | ௬௯ | ௫ |
| தொடங்கற் | ௫௰ | ௧ |
| தொடலைக் | ௱௰௪ | ௫ |
| தொடிநோ | ௱௨௮ | ௰ |
| தொடிப் | ௱௪ | ௭ |
| தொடியொ | ௱௨௪ | ௬ |
| தொடிற் | ௱௰௬ | ௯ |
| தொட்ட | ௪௰ | ௬ |
| தொல்வரவு | ௱௫ | ௩ |
| தொழுதகை | ௮௩ | ௮ |
| தோன்றி | ௨௪ | ௬ |
| நகல்வல்ல | ௱ | ௯ |
| நகுதற் | ௭௯ | ௪ |
| நகைஈகை | ௯௬ | [illegible] |
| நகையு | ௩௧ | ௪ |
| நகையுள்ளு | ௱ | ௫ |
| நகைவகை | ௮௨ | [illegible] |
| நசைஇயார் | ௱௨௰ | [illegible] |
| நச்சப்படா | ௱௧ | ௮ |
| நடுவின்றி | ௰௮ | ௧ |
| நட்டார்கு | ௯௧ | ௮ |
| நட்டார்க்கு | ௬௮ | ௯ |
| நட்டார்போ | ௮௩ | ௯ |
| நட்பிற்குவீ | ௭௯ | ௯ |
| நட்பிற்குறு | ௮௧ | ௨ |
| நண்பாற் | ௱ | ௮ |
| நத்தம் | ௨௪ | ௫ |
| நயஞ்சாரா | ௨௰ | ௪ |
| நயந்தவர்க் | ௱௰௯ | ௧ |
| நயந்தவர்நல் | ௱௨௪ | ௨ |
| நயனிலசொ | ௨௰ | ௭ |
| நயனிலனெ | ௨௰ | ௩ |

( பே )

திருவள்ளுவநாயனாருளிச்செய்த

திருக்குறட்செய்யுளகராதி

# முற்றிற்றுமுற்றும்.



அதிகாரவகராதிமுற்றிற்றுமுற்றும்

## குறளதிகாரவிவரம்.



( ௩ )

## பொருட்பால்



## காமப்பால்.

ஆ இயல்-௮-க்குக்கூடிய
குறள். ௭௮.



ஆ இயல். ௨ - க்கு-பகுதி-௩ - க்குக்குறள் - ௨௱௫௰ -
ஆ திருவள்ளுவர்குறளதிகாரம் - ௱௩௩ - க்கு - இயல் -
௰௩-க்குக் கூடியகுறள் - ௲௩௱௩௰.



## நா ல டி நா னூ று

# அதிகாரவகராதி.



முற்றிற்றுமுற்றும்.

# நாலடி நானூற்றகராதி.

ஏடு. கவி. ஏடு. கவி.

( ௨ )

ஏடு. கவி. ஏடு. கவி.

( ௪ )

## ( ரு )

ஏடு. கவி. ஏடு. கவி.

( வ )



# நாலடி நானூற்றகராதி

முற்றிற்று முற்றும்.

# நாலடி நானூறு

---

## கடவுள் வாழ்த்து.

வானிடுவில்லின்வரவறியாவாய்மையாற்
கானிலந்தோயாக்கடவுளையாநிலஞ்
சென்னியுறவணங்கிச்சேர்துமெம்முள்ளத்து
முன்னியவைமுடிகவென்று.

# செல்வ நிலையாமை.

அறுசுவையுண்டியமர்ந்தில்லாளூட்ட
மறுசிகைநீக்கியுண்டாரும்வறிஞராய்ச்
சென்றிரப்பரோரிடத்துக்கூழெனிற்செல்வமொன்
றுண்டாகவைக்கற்பாற்றன்று. * க *

துகடீர்பெருஞ்செல்வந்தோன்றியக்காற்றொட்டுப்
பகடுநடந்தகூழ்பல்லாரோடுண்க
வகடுறயார்மாட்டுநில்லாதுசெல்வஞ்
சகடக்கால்போலவரும்.

* உ *

யானையெருத்தம்பொலியக்குடைநிழற்கீழ்ச்
சேனைத்தலைவராய்ச்சென்றோருமேனை
வினையுலப்பவேறாகிவீழ்வர்தாங்கொண்ட
மனையாளைமாற்றார்கொள. * ௩ *

நின்றன நின்றன நில்லாவெனவுணர்ந்
தொன்றினவொன்றினவல்லேசெயிற்செய்க
சென்றனசென்றனவாழ்நாள்செறுத்துடன்
வந்ததுவந்ததுகூற்று. * ௪ *

( உ ) செல்வநிலையாமை.

என்னுமொன்றுதங்கையுறப்பெற்றக்காற்
பின்னையென்றுபிடித்திராமுன்னே

கொடுத்தாருயப்போவர்கோடிதீக்கூற்றந்
தொடுத்தாறுசெல்லுஞ்சுரம்.

* ௫ *

இழைத்தநாளெல்லையிகவாபிழைத்தொரீஇக்
கூற்றங்குதித்துய்ந்தாரீங்கில்லையாற்றப்

பெரும்பொருள்வைத்தீர்வழங்குமினாளைத்
தழீஇந்தழீஇந்தண்ணம்படும்.

தோற்றஞ்சான்ஞாயிறுநாழியாவைகலுங்
* ௬ * கூற்றமளந்துநுந்நாளுண்ணுமாற்ற

வறஞ்செய்தருளுடையீராகுமின்யாரும்
பிறந்தும்பிறவாதாரில்.

* ௭ *

செல்வர்யாமென்றுதாஞ்செல்வுழியெண்ணாத
புல்லறிவாளர்பெருஞ்செல்வமெல்லிற்

கருங்கொண்மூவாய்திறந்தமின்னுப்போற்றோன்றி
மருங்கறக்கெட்டுவிடும். *

௮ *

உண்ணானொளிநிறானோங்குபுகழ்செய்யான்
றுன்னருங்கேளிர் துயர்களையான்கொன்னே,
வழங்கான்பொருள்காத்திருப்பானேலஅஆ,
விழந்தானென்றெண்ணப்படும். * ௯ *

உடாஅதுமுண்ணாதுந் தம்முடம்புசெற்றுங்
கெடாஅதநல்லறமுஞ்செய்யார்கொடாஅது
வைத்தீட்டினாரிழப்பர்வான்றோய்மலைநாட,
வுய்த்தீட்டுந்தேனீக்கரி. * ௰ *

இளமைநிலையாமை. ( ௩ )

——o——

நரைவருமென்றெண்ணிநல்லறிவாளர்
குழவியிடத்தேதுறந்தார்புரைதீரா
மன்னாவிளமைமகிழ்ந்தாரேகோலூன்றி
யின்னாங்கெழுந்திருப்பார். * ௧ *

நட்புநாரற்றனநல்லாருமஃகினா
ரற்புத்தளையுமவிழ்ந்தனவுட்காணாய்,
வாழ்தலினூதியமென்னுண்டாம்வந்ததே,
யாழ்கலத்தன்னகலி. * ௨ *

சொற்றளர்ந்துகோலூன்றிச்சோர்ந்தநடையினராய்ப்

பற்கழன் றுபண்டம்பழிகாறுமிற்செறிந் து
காமநெறிபடருங்கண்ணினார்க்கில்லையே,
யேமநெறிபடருமாறு. * ௩ *

தாழாத்தளராத்தலைநடுக்காத்தண்டூன்றா
வீழாவிறக்குமிவண்மாட்டுங்காழிலா
மம்மர்கொண்மாந்தர்க்கணங்காகுந்தன்கைக்கோ
லம்மனைக்கோலாகியஞான்று. * ௪ *

எனக்குத்தாயாகியாளென்னையீங்கிட்டுத்
தனக்குத்தாய்நாடியேசென்றாடனக்குத்தா
யாகியவளுமதுவானாற்றாய்த்தாய்க்கொண்
டேகுமளித்திவ்வுலகு. * ௫ *

( ௨ ) இளமைநிலையாமை.

வெறியயர்வெங்களத்துவேன்மகன்பாணி
முறியார்நறுங்கண்ணிமுன்னர்த்தயங்க
மறிகுளகுண்டன்னமன்றோமகிழ்ச்சி
யறிவுடையாளர்கணில்.

* ௧ *

பனிபடுசோலைப்பயன்மரமெல்லாங்
கனியுதிர்ந்துவீழ்ந்தற்றிளமைநனிபெரிதும்
வேற்கண்ணளென்றிவளைவெஃகன்மின்மற்றிவளுங்
கோற்கண்ணளாகுங்குனிந்து. * எ *

பருவமெனைத்துளபல்லின்பாலேனை
யிருசிகையுமுண்டீரோவென்றுவரிசையா
னுண்ணாட்டங்கொள்ளப்படுதலால்யாக்கைக்கோ
ளெண்ணாரறிவுடையார். * அ *

மற்றறிவாநல்வினையாமிளையமென்னாது
கைத்துண்டாம்போழ்தேகரவாதறஞ்செய்ம்மின்
முற்றியிருந்தகனியொழியத்தீவளியா
னற்காயுதிர்தலுமுண்டு. * கூ *

ஆட்பார்த்துழலுமருளில்கூற்றுண்மையாற்
றோட்கோப்புக்காலத்தாற்கொண்டுய்ம்மின்பீட்பிதுக்கிப்
பிள்ளையைத்தாயலறக்கோடலான்மற்றதன்
கள்ளங்கடைப்பிடித்தனன்று. * ௰ * ஆக ௨௰

## யாக்கைநிலையாமை. (௩)

மலைமிசைத்தோன்றுமதியம்போல்யானைத்
தலைமிசைக்கொண்டகுடையர்நிலமிசைத்
துஞ்சினாரென்றெடுத்துத்தூற்றப்பட்டாரல்லா
லெஞ்சினாரிவ்வுலகத்தில். * ௧ *

வாழ்நாட்கலகாய்வயங்கொளிமண்டிலம்,
வீழ்நாள்படாஅதெழுதலால்வாழ்நா
ளுலவாமுனொப்புரவாற்றுமின்யாரு
நிலவார்நிலமிசைமேல். * ௨ *

மன்றங்கறங்கமணப்பறையாயின
வன்றவர்க்காங்கேபிணப்பறையாய்ப்பின்றை
யொலித்தலுமுண்டாமென்றுய்ந்துபோமாறே
வலிக்குமாமாண்டார்மனம். * ௩ *

சென்றேயெறிபவொருகால்சிறுவரை
நின்றேயெறிபபறையினைநன்றேகாண்
முக்காலைக்கொட்டினுண்மூடித்தீக்கொண்டெழுவர்
செத்தாரைச்சாவார்சுமந்து. ௪ *

கணங்கொண்டுசுற்றத்தார்கல்லென்றலறப்,
பிணங்கொண்டுகாட்டுய்ப்பார்க்கண்டுமணங்கொண்டீண்
டுண்டுண்டுண்டென்னுமுணர்வினாற்சாற்றுமே
டொண்டொண்டொடென்னும்பறை. * ௫ *

நார்த்தொடுத்தீர்க்கிலென்னன்றாய்ந்தடக்கிலென்
பார்த்துழிப்பெய்யிலென்பல்லோர்பழிக்கிலென்
றோற்பையுணின்றுதொழிலறச்செய்தூட்டுங்
கூத்தன்புறப்பட்டக்கால். * ௬ *

படுமழைமொக்குளிற்பல்காலுந்தோன்றிக்
கெடுமிதோர்யாக்கையென்றெண்ணித்தடுமாற்ற
தீர்ப்பேம்யாமென்றுணருந்திண்ணறிவாளரை
நேர்ப்பார்யார்நீணிலத்தின்மேல். * ௭ *

யாக்கையையாப்புடைத்தாப்பெற்றவர்தாம்பெற்ற
யாக்கையாலாயபயன்கொள்கயாக்கை
மலையாடுமஞ்சுபோற்றோன்றிமற்றாங்கே
நிலையாதுநீத்துவிடும். * ௮ *

புன்னுனிமேனீர்போனிலையாமையென்றெண்ணி
யின்னினியேசெய்கவறவினையின்னினியே
நின்றானிருந்தான்கிடந்தான்றன்கேளலறச்
சென்றானெனப்படுதலான். * ௯ *

கேளாதேவந்துகிளைகளாயிற்றோன்றி
வாளாதேபோவரான்மாந்தர்கள்வாளாதே
சேக்கைமரனொழியச்சேணீங்குபுட்போல
யாக்கைதமர்க்கொழியநீத்து. * ௰ * ஆ. ௩௰.

## அறன்வலியுறுத்தல். (௭)

அகத்தாரேவாழ்வாரென்றண்ணாந்துநோக்கிப்
புகத்தாம்பெறாஅர்புறங்கடைபற்றி
மிகத்தாம்வருந்தியிருப்பரேமேலைத்
தவத்தாற்றவஞ்செய்யாதார்.

* ௧ *

ஆவாநாமாக்கநசைஇயறமறந்து
போவாநாமென்னாப்புலைநெஞ்சேயோவாது
நின்றுஞற்றிவாழ்தியெனினுநின்வாழ்நாள்கள்
சென்றனசெய்வதுரை. * ௨ *

வினைப்பயன்வந்தக்கால்வெய்யவுயிரா
மனத்தினழியுமாம்பேதைநினைத்ததனைத்
தொல்லையதென்றுணர்வாரேதடுமாற்றத்
தெல்லையிகந்தொருவுவார்.

* ௩ *

அரும்பெறல்யாக்கையைப்பெற்றபயத்தாற்
பெரும்பயனுமாற்றவேகொள்கக்கரும்பூர்ந்த
சாறுபோற்சாலவும்பின்னுதவிமற்றதன்
கோதுபோற்போகுமுடம்பு. * ௪ *

கரும்பாட்டிக்கட்டிசிறுகாலைக்கொண்டார்
துரும்பெழுந்துவேங்காற்றுயராண்டுழவார்
வருந்தியுடம்பின்பயன்கொண்டார்கூற்றம்
வருங்காற்பரிவதிலர். * ௫ *

## அறன்வலியுறுத்தல்.

இன்றுகொலன்றுகொலென்றுகொலென்னாது
பின்றையேநின்றதுகூற்றமென்றெண்ணி
யொருவுமின்றீயவையொல்லும்வகையான்
மருவுமின்மாண்டாரறம். * ௬ *

மக்களாலாயபெரும்பயனுமாயுங்கா
லெத்துணையுமாற்றப்பலவானுத்தொக்க
வுடம்பிற்கேயொப்புரவுசெய்தொழுகாதும்பர்க்
கிடந்துண்ணப்பண்ணப்படும். * ௭ *

உறக்குந்துணையதோராலம்வித்தீண்டி
யிறப்பநிழற்பயந்தாஅங்கறப்பயனுந்
தான்சிறிதாயினுந்தக்கார்கைப்பட்டக்கால்
வான்சிறிதாப்போர்த்துவிடும். * ௮ *

வைகலும்வைகல்வரக்கண்டுமஃதுணரார்
வைகலும்வைகலைவைகுமென்றின்புறுவர்
வைகலும்வைகற்றம்வாழ்நாண்மேல்வைகுதல்
வைகலைவைத்துணராதார். * ௯ *

மாறவருங்கலநீக்கியிலவென்று
மீறவிரிவினுல்வாழ்வேன்மன்னீ தத்தா
லூட்டியக்கண்ணுழுறுதிசேர்ந்திவ்வுடம்ப
நீட்டித்துநிற்குமெனின். * ௰ * அதி ௪௰.

## தூய்தன்மை. (௫)

---

மாக்கேழ்மடநல்லாயென்றரற்றுஞ்சான்றவர்
நோக்கார்கொனொய்யதோர்புக்கில்லையாக்கைக்கோ
ரீச்சிறகன்னதோர்தோலறினும்வேண்டுமே
காக்கைகடிவதோர்கோல்.
* ௧ *

தோற்போர்வைமேலுந்துளைபலவாய்ப்பொய்ம்மறைக்கு
மீப்போர்வைமாட்சித்துடம்பானால்மீப்போர்வை
பொய்ம்மறையாக்காமம்புகலாதுமற்றதனைப்
பைம்மறியாப்பார்க்கப்படும்.

* ௨ *

தக்கோலந்தின்றுதலைநிறையப்பூச்சூடிப்
பொய்க்கோலஞ்செய்யவொழியுமேயெக்காலு
முண்டிவினையுறைக்குமெனப்பெரியோர்
கண்டுகைவிட்டமயல். * ௩ *

தெண்ணீர்க்குவளைபொருகயல்வேலென்று
கண்ணிற்புன்மாக்கள்கவற்றவிடுவனோ
வுண்ணீர்களைந்தக்காலுங்குருன்றிட்டன்ன
கண்ணீர்மைகண்டொழுகுவேன். * ௪ *

முல்லைமுகைமுறுவன்முத்தென்றிவைபிதற்றுங்
கல்லாப்புன்மாக்கள்கவற்றவிடுவனோ
வெல்லாருங்காணப்புறங்காட்டுதிர்ந்துக்க
பல்லென்புகண்டொழுகுவேன். * ௫ *

## ( ௰ ) தூய்தன்மை.

குடருங்கொழுவுங்குருதியுமென்புந்
தொடர்நரம்பொடுதோலுமிடையிடையே
வைத்ததடியும்வழும்புமாமற்றிவற்று
ளெத்திறத்தாளீர்ங்கோதையாள். * ௧ *

ஊறியுவர்த்தக்கவொன்பதுவாய்ப்புலனுங்
கோதிக்குழம்பலைக்குங்கும்பத்தைப்பேதை
பெருந்தோளிபெய்வளாயென்னுமீப்போர்த்த
கருந்தோலாற்கண்விளக்கப்பட்டு. * ௭ *

பண்டமறியார்படுசாந்துங்கோதையுங்
கொண்டுபாராட்டுவார்கண்டிலர்கொன்மண்டிப்
பெடைச்சேவல்வன்கழுகுபேர்த்திட்டுக்குத்து
முடைச்சாகாடச்சிற்றுழி.

* ௮ *

கழிந்தாரிடுதலைகண்டார்நெஞ்சுட்கக்
குழிந்தாழ்ந்தகண்ணவாய்த்தோன்றியொழிந்தாரைப்
போற்றிநெறிநின்மினிற்றிதன்பண்பென்று
சாற்றுங்கொல்சாலச்சிரித்து. * ௯ *

உயிர்போயார்வெண்டலையுட்கச்சிரித்துச்
செயிர்தீர்க்குஞ்செம்மாப்பவரைச்செயிர்தீர்ந்தார்
கண்டிற்றிதன்வண்ணமென்பதனாற்றம்மையோர்
பண்டத்துள்வைப்பதிலர். * ௰ * ஆக ௫௰

---

விளக்குப்புகவிருண்மாய்ந்தாங்கொருவன்
றவத்தின்முன்னில்லாதாம்பாவம்விளக்குநெய்
தேய்விடத்துச்சென்றிருள்பாய்ந்தாங்குநல்வினை
தீர்விடத்துநிற்குமாந்தீது. * க *

நிலையாமைநோய்மூப்புச்சாக்காடென்றெண்ணித்
தலையாயார்தங்கருமஞ்செய்வார்தொலைவில்லாச்
சத்தமுஞ்சோதிடமுமென்றாங்கிவைபிதற்றும்
பித்தரிற்பேதையாரில். * உ *

இல்லமிளமையெழில்வனப்புமீக்கூற்றஞ்
செல்வம்வலியென்றிவையெல்லாமெல்ல
நிலையாமைகண்டுநெடியார்துறப்பர்
தலையாயார்தாமுய்யக்கொண்டு.
* ங *

துன்பம்பலநாளுழந்துமொருநாளை
யின்பமேகாமுறுவரேழையாரின்ப
மிடைதெரிந்தின்னாமைநோக்கிமனையா
றடைவொழிந்தாரான்றமைந்தார். * ச *

கொன்னேகழிந்தன்றிளமையுமின்னே
பிணியொடுமூப்பும்வருமாற்றுணிவொன்றி
யென்னொடுசூழாதெழுநெஞ்சேபோதியோ
நன்னெறிசேரநமக்கு * ௫ *

( ௰௨ ) துறவு.

மாண்டகுணத்தொடுமக்கட்பேறில்லெனினும்
பூண்டான்கழித்தற்கருமையார்பூண்ட
மிடியென்னுங்காரணத்தின்மேன்முறைக்கண்ணே
கடியென்றார்கற்றறிந்தார்

* ௬ *

ஊக்கித்தாங்கொண்டவிரதங்களுள்ளுடையத்
தாக்கருந்துன்பங்கடாந்தலைவந்தக்கா
னீக்கிநிறூஉமுரவோரேநல்லொழுக்கங்
காக்குந்திருவத்தவர்

* ௭ *

தம்மையிகழ்ந்தமைதாம்பொறுப்பதன்றிமற்
றெம்மையிகழ்ந்தவினைப்பயத்தாலும்மை

யெரிவாய்நிரயத்துவீழ்வர்கொலென்று
பரிவதூஉஞ்சான்றோர்கடன்.

* அ *

மெய்வாய்கண்மூக்குச்செவியெனப்பேர்பெற்ற
வைவாயவேட்கையவாவினைக்கைவாய்
கலங்காமற்காத்துய்க்குமாற்றலுடையான்
விலங்காதுவீடுபெறும். * கூ *

துன்பமேமிகுதாக்கண்டுந்துறவுள்ளா
ரின்பமேகாமுறுவரேழையாரின்ப
மிசைதோறுமற்றதனின்றுன்பநோக்கிப்
பசைதல்பரியாதாமேல். * ௰ * ஆகூ ௯௰.

சினமின்மை. ( ௰௩ )

---

மதித்திறப்பாருமிறக்கமதியா
மிதித்திறப்பாருமிறக்கமிதித்தேறி
யீயுந்தலைமேலிருத்தலாலஃதறிவார்
காயுங்கதமின்மைநன்று. * ௭ *

தண்டாச்சிறப்பிற்றம்மின்னுயிரைத்தாங்காது
கண்டுழியெல்லாந்துறப்பவோமண்டி

யடிபெயராதாற்றவிளிவந்தபோழ்தின்
முடிகிற்குமுள்ளத்தவர்.

* ௨ *

காவாதொருவன்றன்வாய்திறந்துசொல்லுஞ்சொ
லோவாதேதன்னைச்சுடுதலாலோவாதே
யாய்ந்தமைந்தகேள்வியறிவுடையாரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்தசொல்லார்கறுத்து.
* ௯ *

நேர்த்துநிகரல்லார்நீரல்லசொல்லியக்கால்
வேர்த்துவெகுளார்விழுமியோரோர்த்ததனை
யுள்ளத்தானுள்ளிடமாத் தானூர்கேட்பத்
துள்ளித்தூண்முட்டுமாங்கீழ். * ௪ *

இனையானடக்கமடக்கங்கிளைபொரு
ளில்லான்கொடையேகொடைப்பயனெல்லா
மொறுக்குமதுகையுறுமுடையான்
பொறுக்கும்பொறையேபொறை. * ௫ *

( ம௪ ) சினமின்மை.

கல்லெறிந்தன்னகயவர்வாயின்னச்சொ
லெல்லாருங்காணப்பொறுத்துய்ப்பரொல்லை
யழிதீற்றுற்றைபவிந்தநாகம்போற்றத்தங்
குடிமையான்வாதிக்கப்பட்டு. * ௬ *

மாற்றாய்நின்றுதம்மாறேற்பார்க்கேலாமை
யாற்றாமையென்னாரறிவுடையாராற்றாமை
நேர்த்தின்னாமற்றவர்செய்தக்காற்றாமவரைப்
பேர்த்தின்னாசெய்யாமைநன்று.

* ௭ *

நெடுங்காலமோடினு நீசர்வெகுளி
கெடுங்காலமின்றிப்பரக்குமடுங்காலை
நீர்கொண்டவெப்பம்போற்றானேதணியுமே
சீர்கொண்டசான்றோர்சினம். * ௮ *

உபகாரஞ்செய்ததனையோராதேதங்க
ணபகாரமாற்றச்செயினுமுபகாரந்
தாஞ்செய்வதல்லாற்றவற்றினாற்றீங்கூக்கல்
வான்றோய்க்குடிப்பிறந்தார்க்கில். * ௯ *

கூர்த்துநாய்கௌவிக்கொளக்கண்டுந்தம்வாயாற்
பேர்த்துநாய்கௌவினாரீங்கில்லைநீர்த்தன்றிக்
கீழ்மக்கள்கீழாயசொல்லியக்காற்சொல்பவோ
மேன்மக்கடம்வாயான்மீட்டு. * ௰ * அதி ௭

பொறையுடைமை. ( ௰௫ )

கோதையருவிக்குளிர்வரைநன்னாட
பேதையோடியாதுமுரையற்க்பேதை
யுரைப்பிற்சிதைந்துரைக்குமொல்லும்வகையான்
வழுக்கிக்கழிதலேநன்று.

* ௧ *

நேரல்லார்நீரல்லசொல்லியக்கான்மற்றது
தாரித்திருத்தறகுதிமற்றேனும்
புகழ்மையாக்கொள்ளாதுபொங்குநீர்ஞாலஞ்
சமழ்மையாக்கொண்டுவிடும்.

* ௨ *
காதலார்சொல்லுங்கடுஞ்சொல்லுவந்துரைக்கு
மேதிலாரின்சொலிற்றீதாமோபோதலா
மாதர்வண்டார்க்குமலிகடற்றண்சேர்ப்ப
வாவற்றிவார்ப்பெறின்.
* ௩ *

அறிவறிந்தடங்கியஞ்சுவதஞ்சி
யுறுவதுலகுவப்பச்செய்தும்பெறுவதனு
லின்புற்றுவாழுமியல்புடையாரென்றுந்
துன்புற்றுவாழ்தலரிது. * ௯ *

வேற்றுமையின்றிக்கலந்திருவர்நட்டக்கால்
தேற்றாவொழுக்கமொருவன்கணுண்டாயி
னாற்றுந்துணையும்பொறுக்கபொறானாயிற்
றூற்றாதேதூரவிடல் * ௰ *

( ௰௧ ) பொறையுடைமை.

இன்னாசெயினுமினியவொழிகென்று
தன்னையேதானோவினல்லதுதுன்னிக்
கலந்தாரைக்கைவிடுதல்கானகநாட
விலங்கிற்கும்விள்ளலரிது.
* ௧ *

பெரியார்பெருநட்புக்கோடலுஞ்செய்த
வரியபொறுப்பவென்றன்றேயரியரோ
வொல்லெனருவியுயர்வரைநன்னாட
நல்லசெய்வார்க்குத்தமர்

* எ *

வற்றிமற்றாற்றப்பசிப்பினும்பண்பிலார்க்
கற்றமறிவுரையற்கவற்ற
மறைக்குந் துணை யார்க்குரைப்பவேதம்மைத்
துறக்குந் துணிவிலாதார்.

* அ *

இன்பம்பயந்தாங்கிழிவுதலைவரினு
மின்பத்தின்பக்கமிருந்தைக்கவின்ப
மொழிவாமைகண்டாலுமோங்குருவிநாட
பழியாகாவாறேதலை.

* கூ *

தான்கெடினுந்தக்கார்கேடெண்ணற்கதன்னுடம்பி
னூன்கெடினுமுண்ணார்கைத் துண்ணற்கவான்கவிந்த
வையகமெல்லாம்பெறினுமுரையற்க
பொய்யோடிடைமிடைந்தசொல். * ய * ஆகமும்

பிறர்மனைநயவாமை. ( மை )

---

அச்சம்பெரிதாலதற்கின்பஞ்சிற்றளவா
லிச்சதினையுங்காற்கோக்கொலையா லிச்சலுங்

ஞப்பிக்கேகூர்த்தவினையாற்பிறன்றா
நம்பர்கநாணுடையார்.

* க *

அறம்புகழ்கேண்மைபெருமைபிந்நான்கும்
பிறன்றாநச்சுவார்ச்சேராபிறன்றா

நச்சுவார்ச்சேராம்பழிபாவமென்
றச்சத்தொடிந்நாற்பொருள்.

* உ *

புக்கவிடத்தச்சம்போதரும்போதச்சந்
துய்க்குமிடத்தச்சந்தோன்றுமற் காப்பச்ச
மெக்காலுமச்சந்தருமாலெவன்கொலோ
வுட்கான்பிறனில்புகல்.

* ங *

காணிற்குடிப்பழியாங்கையுறிற்கால்குறைபு
மாணின்மைசெய்யுங்கலச்சமாநீணிரயத்
துன்பம்பயக்குமாற்றுச்சாரிநீகண்ட
வின்பமெனக்கெனைத்தாற்கூறு.

* ௪ *

செம்மையொன் றின்றிச் சிறியாரினத்தராய்க்
கொம்மைவரிமுலையார் தோண்மரீஇ யும்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றோரிம்மை
யலியாகியாடியுண்பார்.

* ௫ * (௰அ) -பிறர்மனைநயவாமை.

பல்லா ரறியப்பறையறைந் துநாட்கேட்டுக்
கல்யாணஞ்செய் துகடிப்புக்கமெல்லியற்
காதன் மனையாளுமில்லாளாவென் னொருவ
னேதின் மனையாளை நோக்கு.

* ௬ *

அம்பலயலெடுப்பவஞ்சித்தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇமைந்துற்றநம்பு
நிலைமையினெஞ்சத்தான் றுப்புரவுபாம்பின்
றலைநக்கியன்னதுடைத்து.

* ௭ *

பாவாவெளிப்படாபல்லோர்கட்டங்கா
வுாவோர்கட்காமநோயோஞ் கொடிதே
லிாவாருணூனுப்படலஞ்சியாது
முறையாதுள்ளாறிவிடும்.

* அ *

அம்புமழலுமவிர்கதிர்ஞாயிறும்
வெம்பிச்சுடினும்புறஞ்சுடும் வெம்பிக்
கவற்றிமநத்தைச்சுடுதலாற்காம
மவற்றினுமஞ்சப்படும். * ஆ *

ஊருளெழுந்தவுருகெழுசெந்தீக்கு
நீருட்குளித்துமுயலாகுநீருட்
குளிப்பினுங்காமஞ்சுடுமேகுன்றேறி
யொளிப்பினுங்காமஞ்சுடும். * ம * ஆடி கம.

ஈ ஞ ஸ. ( மக )

—

இல்லாவிடத்துமியைந்தவளவினு
ளுள்ளவிடம்போற்பெரிதுவந்துமெல்லக்
கொடையொடுபட்டகுணனுடைமாந்தர்க்
கடையாவாமாண்டைக்கதவு. * ௧ *

முன்னரேசாநாண்முனிதக்கமூப்புள
பின்னரும்பீடழிக்குநோயுளகொன்னே
பரவன்மின்பற்றன்மின்பாத்துண்மின்யாதுங்
கரவன்மின்கைத்துண்டாம்போழ்து. * ௨ *

நடுக்குற்றுத்தற்சேர்ந்தார்துன்பந்துடையார்
கொடுத்துத்தான்றுய்ப்பினுமீண்டுங்காலீண்டு
மிடுக்குற்றுப்பற்றினுநில்லாதுசெல்வம்
விடுக்கும்வினையுலந்தக்கால். * ௩ *

இம்மியரிசித்துணையானும்வைகலு
நும்மிலியைவகொடுத்துண்மினும்மைக்
கொடாஅதவரென்பர்குண்டுநீர்வையத்
தடாஅவடுப்பினவர். * ௪ *

மறுமையுமிம்மையுநோக்கியொருவற்
குறுமாறியைவகொடுத்தல்வறுமையா
லீதலிசையாதெனினுமிரவாமை
யீதலிரட்டியுறும். * ௫ *

## ஈகை.

நடுவூருள்வேதிகைச்சுற்றுக்கோட்புக்க
படுபனையன்னர்பலர்நச்சவாழ்வார்
குடிகொழுத்தக்கண்ணுங்கொடுத்துண்ணுமாக்க
ளிடுகாட்டுளேற்றுப்பனை. * ௬ *

பெயற்பான்மழைபெய்யாக்கண்ணுமுலகஞ்
செயற்பாலசெய்யாவிடினுங்கயப்புலால்
புன்னைகடியும்பொருகடற்றண்சேர்ப்ப
வென்னையுலகுய்யுமாறு. * ௭ *

ஏற்றகைமாற்றாமையென்னானுந்தாம்வரையா
தாற்றாதார்க்கீவதாமாண்கடனாற்றின்
மலிகடற்றண்சேர்ப்பமாறீவார்க்கீதல்
பொலிகடனென்னும்பெயர்த்து. * ௮ *

இறப்பச்சிறிதென்னாதில்லென்னாதென்று
மறப்பயன்யார்மாட்டுஞ்செய்கமுறைப்புதவி
னையம்புகூஉந்தவசிகடிஞைபோற்
பையநிறைத்துவிடும். * ௯ *

கடிப்பிடுகண்முரசங்காதத்தோர்கேட்ப
நீடித்துமுழங்கியதோர்யோசனையோர்கேட்ப
எடுக்கியமூவுலகுங்கேட்குமேசான்றோர்
கொடுத்தாரெனப்படுஞ்சொல். * ம *

ஷீ ௩.

## பழைமை. ( உக )

---

பல்லாவுளய்த்துவிடினுங்குழக்கன்று
வல்லதாந்தாய்நாடிக்கோடலைத்தொல்லைப்
பழைமையுமன்னதகைத்தேதற்செய்த
கிழவனைநாடிக்கொளற்கு.
* க *

உருவுமிளமையுமொண்பொருளுமுட்கு
மொருவழிநில்லாமைகண்டுமொருவழி
யொன்றேயுமில்லாதான்வாழ்க்கையுடம்பிட்டு
நின்றுவீழ்ந்தக்கதுடைத்து. * உ *

வளம்படவேண்டாதார்யாரியாருமில்லை

யளந்தனபோகமவாவாற்ருன்
விளங்காய்நிரட்டிருரில்லைக்களங்கனியைக்
காரொனச்செய்தாருமில்.

* ௩ *

உறற்பாலநீக்கலுறுவர்க்குமாகா
பெறற்பாலனையவுமன்னவாமாரி
வறப்பிற்றருவாருமில்லையதனைச்
சிறப்பிற்றணிப்பாருமில்.

* ௪ *

தினைத்துணையாகித்தந்தேசுள்ளடக்கிப்
பனைத்துணையார்வைகலும்பாடழிந்துவாழ்வர்
நினைப்பக்கிடந்ததெவனுண்டாமேல
வினைப்பயனல்லாற்பிற.

* ரு * ( உ௨ ) பழைவினை.

பல்லான்றகேள்விப்பயனுணர்வார் வீபவுங்
கல்லாதார்வாழ்வதறிதிரோற்கல்லாதார்
சேதநமென்னுமச்சேறகத்தின்மையாற்
கோதென்றுகொள்ளாதாங்கூற்று.

* ௧ *

இடும்பைகூர்நெஞ்சத்தாரெல்லாருங்காண
நெடுங்கடைநின்றுழல்வதெல்லாமடம்பட்டு
வன்னங்கிழிக்குமலைகடற்றண்சேர்ப்ப
முன்னைவினையாய்விடும் * ௭ *

அறியாருமல்லாரறிவதறிந்தும்
பழியோடுபட்டவைசெய்தல்வளியோடி
நெய்தனறவுயிர்க்குநீள்கடற்றண்சேர்ப்ப
செய்தவினையான்வரும்.

* ௮ *

ஈண்டுநீர்வையத்துளெ.ல்லாருமெத்துணையும்
வேண்டார்மற்றீயவிழைபயனல்லவை
வேண்டினும்வேண்டாவிடினுமுறற்பால
தீண்டாவிடுதலரிது

* ௯ *

சிறுகாபெருகாமுறைபிறழ்ந்துவாரா
வுறுகாலத்தூற்றாவாமிடத்தேயாகுஞ்
சிறுகாலைப்பட்டபொறியுமதனா
லிறுகாலத்தென்னைபரிவு. * ௰ *

---

இசையாவொருபொருளில்லென்றல்யார்க்கும்
வசையன்றுவையத்தியற்கைநசையழுங்க
நின்றோடிப்பொய்த்தனிறைதொடீஇசெய்ந்நன்றி
கொன்றாரிற்குற்றமுடைத்து. * ௧ *

தக்காருந்தக்கவரல்லாருந்தந்நீர்மை
யெக்காலுங்குன்றலிலராவரக்காரம்

யாவரோதின்னினுங்கையாதாங்கைக்குமாந்
தேவரோதின்னினும்வேம்பு.

* ௨ *

காலாடுபோழ்திற்கழிகிளைஞர்வானத்து
மேலாடுமீனிற்பலராவரேலா
விடரொருவருற்றக்காலீர்ங்குன்றநாட
தொடர்புடையேமென்பார்சிலர்.

* ௩ *

வடுவிலாவையத்துமன்னியமூன்றி
னடுவணதெய்தவிருதலையுமெய்து
நடுவணதெய்தாதானெய்துமுலைப்பெய்
தடுவதுபோலுந்துயர். * ௯ *

நல்லாவின்கன்றாயினுகும்விலைபெறூஉங்
கல்லாரேயாயினுஞ்செல்வர்வாய்ச்சொற்செல்லும்
புல்லீரப்போழ்தினுழவேபோன்மீதாடிச்
செல்லாவாநல்கூர்ந்தார்சொல்.
* ௰ *
( உச ) மெய்ம்மை.
இடம்படமெய்ஞ்ஞானங்கற்பினுமென்று
மடங்கார்தாரொன்றுமடங்கார் தடங்கண்ணாய்
உப்பொடுநெய்பாறயிர்காயம்பெய்தடினுங்
கைப்பறாபேய்ச்சுரையின்காய்.
* க *

தம்மைஇகழ்வாரைத்தாமவரின்முன்னிகழ்க
வென்னைஅவரொடுபட்டது புன்னை
விறற்பூங்கமழ்கானல்வீங்குநீர்ச்சேர்ப்ப
வுறற்பாலயார்க்குமுறும்.

* ௭ *

ஆவேறுருவினவாயினுமாபயந்த
பால்வேறுருவினவல்லவாம்பால்போ

லொருதன்மைத்தாகுமறநெறியாபோ
லுருவுபலகொளலீங்கு.

* ௮ *

யாஅருலகத்தோர்சொல்லில்லார்தேருங்கால்
யாஅருபாயத்தின்வாழாதார்யாஅ
ரிடையாகவின்னாதசெய்யாதார்யாஅர்
கடைபோகச்செல்வமுய்த்தார்.

* ௯ *

தாஞ்செய்வினையல்லாற்றம்மொடுசெல்வதுமற்
றியாங்கணுந்தேரிற்பிறிதில்லையாங்குத்தாம்
போற்றிப்புனைந்தவுடம்பும்பயமின்றே
கூற்றங்கொண்டோடும்பொழுது. * ௰ * ஆக ௱௨௰.

—o—

தூக்கத் துட்டுஞ்சித் துறவின்கட் சேர்கலா
மக்கட்பிணைத் தாளுகொடுதொக்க
விலங்கிற்றும்புள்ளிற்றுங்காட்டுபுலன்கெட்ட
புல்லறிவாளர்வயிறு.

* ௧ *

இரும்பார்க்குங்காலராய்யேதிலார்க்காளாய்க்
கரும்பார்கழனியுட்சேர்வர்சுரும்பார்க்குங்
காட்டுளாய்வாழுஞ்சிவலுங்குறும்பூழுங்
கூட்டுளாய்க்கொண்டுவைப்பார்.

* உ *

அக்கேபோலங்கைமொழியவிரலழுகித்
துக்கத்தொழுநோயெழுபவேயக்கா
லலவனைக்காலொடித் தூக்கான்முரித் துத்தின்ற
பலவினைவந் தடைந்தக்கால்.

* ௩ *

நெருப்புழற்சேர்ந்தக்கானைப்போல்வதூஉ
மெரிப்பச்சுட்டெவ்வநோயாக்கும்பாப்பக்
கொடுவினையாகுவர்கோடாருங்கோடிக்
கடுவினையாகியார்ச்சார்ந்து. * ௪ *

பெரியவர்கேண்மைபிறைபோலநாளும்
வரிசைவரிசையாநந்தும்வரிசையால்
வானூர்மதியம்போல்வைகலுந்தேயுமே
தானேசிறியார்தொடர்பு.

* ரு *

( உ௯ ) தீவினையச்சம்.

சான்றோரெனமதித்துச்சார்ந்தாய்மற்சார்ந்தாய்க்குச்
சான்றாண்மைசார்ந்தார்கணில்லாயிற்சார்ந்தோய்கேள்
சாந்தகத்துண்டென்றுசெப்புத்திறந்தொருவன்
பாம்பகத்துக்கண்டதுடைத்து.

* ௬ * யாஅரொருவரொருவர்தம்முள்ளத்தைத்

தேருந்துணைமையுடையவர்சாரற்
கருமணிநின்றிமைக்குநாடகேண்மக்கண்
மருமம்வேறுசெய்கையும்வேறு. * எ *

உள்ளத்தானள்ளா துறுதித்தொழிலாய்க்
கள்ளத்தானட்டார்கழிகேண்மைதெள்ளிப்
புனற்செதும்புநின்றலைக்கும்பூங்குன்றநாட
மதத்துக்கண்மாசாய்விடும்

* ௮ *

ஒக்கியவொள்வாடன்னொன்னார்கைப்பட்டக்கா
லாக்கமழிப்பதூஉமெய்யாகுமாக்க
ளிருமையுஞ்சென்றுசுடுதலானல்ல
கருமமேகல்லார்கட்டீர்வு.

* ௯ *

மனைப்பாசங்கைவிடாய்மக்கட்கென்றேங்கி
யெனைத்துழிவாழ்தியோநெஞ்சேயெனைத்துஞ்
சிறுவரையேயாயினுஞ்செய்தநன்றல்லா
லுறுபயனோவில்லையுயிர்க்கு * ௰ * ஆ. ௱௩௰.

---

அறத்துப்பான்முற்றிற்று.

பொருட்பால்கல்வி. ( ௨௭ )

---

குஞ்சியழகுங்கொடுந்தானைக்கோட்டழகு
மஞ்சளழகுமழகல்லநெஞ்சத்து
நல்லம்யாமென்னுநடுவுநிலைமையாற்
கல்வியழகேயழகு. * க *

இம்மைபயக்குமாலீயக்குறைவின்றாற்
றம்மைவிளக்குமாற்றாமுளராக்கேடின்றா
லெம்மையுலகத்தும்யாங்காணேங்கல்விபோன்
மம்மாறுக்குமருந்து. * உ *

களர்நிலத்துப்பிறந்தவுப்பினைச்சான்றோர்
விளைநிலத்துநெல்லின்விழுமிதாக்கொள்வர்
கடைநிலத்தோராயினுங்கற்றுணர்ந்தோரைத்
தலைநிலத்துவைக்கப்படும். * ங *

வைப்புழிக்கோட்படாவாய்த்தீயிற்கேடில்லை
மிக்கசிறப்பினரசர்செறின்வவ்வா
ரெச்சமெனவொருவன்மக்கட்குச்செய்வன
விச்சைமற்றல்லபிற. * ச *

கல்விகரையிலகற்பவர்நாள்சில
மெல்லநினைக்கிற்பிணிபலதெள்ளிதி

ராய்ந்தமைவுடையகற்பவேநீரொழியப்
பாலுண்குருகிற்றெரிந்து.

* ௫ * ( உஅ ) பொருட்பால்கல்வி,

தோணியியக்குவான்றொல்லைவருணத்துக்
காணிற்கடைப்பட்டானென்றிகழார்காணா
யவன்றுணையாவாறுபோயற்றேநூல்கற்ற
மகன்றுணையாநல்லகொளல்.
* ௬ *

தவலருந்தொல்கேள்வித்தன்மையுடையா
ரிகலிலவெஃகுடையார்தம்முட்குழீஇ
நகலினினிதாயிற்காண்பாமகல்வானத்
தும்பருறைவார்பதி.
* ௭ *

கனைகடற்றண்சேர்ப்பகற்றறிந்தார்கேண்மை
நுனியிற்கரும்புதின்றற்றேநுனிநீக்கித்
தூரிற்றின்றன்னதகைத்தரோபண்பிலா
வீரமிலாளர்தொடர்பு. * ௮ *

கல்லாரேயாயினுங்கற்றாரைச்சேர்ந்தொழுகி
னல்லறிவுநாளுந்தலைப்படுவர்தொல்சிறப்பி

னொண்ணிறப்பாதிரிப்பூச்சேர்தலாற்புத்தோடு
தண்ணீர்க்குத்தான்பயந்தாங்கு.

* கூ *

அலகுசால்கற்பினறிவுநூல்கல்லா
துலகநூலோதுவதெல்லாங்கலகல
கூஉந்துணையல்லாற்கொண்டுதடுமாற்றம்
போஒந்துணையறிவாரில். * ய *

அ-ாசய. குடிப்பிறப்பு. ( உக )

——————

உடுக்கையுலறியுடம்பழிந்தக்கண்ணுங்
குடிப்பிறப்பாளர்தங்கொள்கையிற்குன்று
றிடுக்கண்டலைவந்தக்கண்ணுமரிமா
கொடிப்புற்கறிக்குமோமற்று. * க *

சான்றாண்மைசாயலொழுக்கமிவைமூன்றும்
வான்றோய்குடிப்பிறந்தார்க்கல்லதுவான்றோயு
மைதவழ்வெற்படாஅபெருஞ்செல்வ
மெய்தியக்கண்ணும்பிறர்க்கு. * ௨ *

இருக்கையெழலுமெதிர்செலவுமேனை
விடுப்பவொழிதலோடின்னகுடிப்பிறந்தார்
குன்றவொழுக்கமாக்கொண்டார்கயவரோ
டொன்றுவுணரற்பாற்றன்று. * ௩ *

நல்லவைசெய்யினியல்பாகுந்தீயவை
பல்லவர்தூற்றும்பழியாகுமெல்லா
முணருங்குடிப்பிறப்பினூதியமென்னோ
புணருமொருவர்க்கெனின். * ௪ *

கல்லாமையச்சங்கயவர்தொழிலச்சஞ்
சொல்லாமையுள்ளுமோர்சோர்வச்சமெல்லா
மிரப்பார்க்கொன்றீயாமையச்சமரத்தாரிம்
மாணாக்குடிப்பிறந்தார். * ௫ *

( கூ ) குடிப்பிறப்பு.

இனநன்மையின்சொலொன்றீதன்மற்றேனை
மனநன்மையென்றிவையெல்லாங்கனமணி
முத்தோடிமைக்குமுழங்குவரித்தண்சேர்ப்ப
விற்பிறந்தார்கண்ணேயுள.
* ௬ *

செய்கையழிந்துசிதன்மண்டிற்றாயினும்
பெய்யாவொருசிறைபேரிலுடைத்தாகு
மெவ்வமுழந்தக்கடைத்துங்குடிப்பிறந்தார்
செய்வர்செயற்பாலவை.

* ௭ *

ஒருபுடைபாம்புகொளினுமொருபுடை
யங்கண்மாஞாலம்விளக்குறூஉந்திங்கள்போற்
செல்லாமைசெவ்வனேர்நிற்பினுமொப்புரவிற்
கொல்கார்குடிப்பிறந்தார். * ௮ *

செல்லாவிடத்துங்குடிப்பிறந்தார்செய்வன
செல்லிடத்துஞ்செய்யார்சிறியவர்புல்வாய்
பருமம்பொறுப்பினும்பாய்வரிமாபோற்
பொருமுரணாற்றுதலின்று.

* ௯ *

ஏற்றொன்றுமில்லாவிடத்துங்குடிப்பிறந்தா
ரற்றுத்தற்சேர்ந்தார்க்கசைவிடத்தாற்றுவ
ரற்றக்கடைத்துமகல்யாறகழ்ந்தக்காற்
றெற்றெனத்தெண்ணீர்படும். * ௰ * ௱௪௰.

## மேன்மக்கள். ( ௰௫ )

---

அங்கண்விசும்பினகனிலாப்பாரிக்குந்
திங்களுஞ்சான்றோருமொப்பர்மற்றிங்கண்

மறுவாற்றுஞ்சான்றோரஃதாற்றார்தெருமந்து
தேய்வரொருமாசுறின்.

* க * இசையுமெனினுமிசையாதெனினும்
வசைதீரவெண்ணுவர்சான்றோர்விசையி
னரிமாவுளங்கிழித்தவம்பினிற்றீதோ
வரிமாப்பிழைப்பெய்தகோல்.

* உ *

நாம்பெழுந்துநல்கூர்ந்தாராயினுஞ்சான்றோர்
றாம்பெழுந்துனாற்றங்கொண்டேறுறாங்கவரு
வுள்ளமெனுநாரினாற்கட்டியுளவரையாற்
செய்வர்செயற்பாலவை.

* ங *

செல்வழிக்கண்ணொருநாட்காணினுஞ்சான்றவர்
தொல்வழிக்கேண்மையிற்றோன்றப்புரிந்தியாப்பர்
நல்வரைநாடசிலநாளடிப்படிற்
கல்வரையுமுண்டாநெறி.

* ச *

புல்லாவெழுத்திற்பொருளில்வறுங்கோட்டி
கல்லாவொருவனுரைப்பவுங்கண்ணோடி
நல்லார்வருந்தியுங்கேட்பரேமற்றவன்
பல்லாருணாணல்பரிந்து.

* ரு *

# மேன்மக்கள்.

கடித்துக்கரும்பினைக்கண்டகரநூறி
யிடித்துநீர்கொள்ளினுமின்சுவைத்தேயாகும்
வடுப்படவைதிறந்தக்கண்ணுங்குடிப்பிறந்தார்
கூறார்தம்வாயிற்சிதைந்து.

* ௬ *

கள்ளார்கள்ளுண்ணார்கடிவகடிந்தொரீஇ
வெள்ளிப்பிறரையிகழ்ந்துரையார்தள்ளியும்
வாயிற்பொய்கூறார்வடுவறுகாட்சியார்
சாயிற்பரிவதிலர்.

* ௭ *

பிறர்மறையின்கட்செவிடாய்த்திறனறிந்
தேதிலாரிற்கட்குருடனாய்த்தீய
புறங்கூற்றின்மூங்கையாய்நிற்பானேல்யாது
மறங்கூறவேண்டாவவற்கு * ௮ *

பன்னாளுஞ்சென்றக்காற்பண்பிலார்தம்முழை
யென்னானும்வேண்டுபவென்றிகழ்பவென்னானும்
வேண்டினுநன்றுமற்றென்றுவிழுமியோர்
காண்டொறுஞ்செய்வர்சிறப்பு. * ௯ *

உடையாரிவரென்றொருதலையாப்பற்றிக்
கடையாயார்பின்சென்றுவாழ்வருடைய
பிலந்தலைப்பட்டதுபோலாதேநல்ல
குலந்தலைப்பட்டவிடத்து. * ௰ * ஆ௲ ாஎ௰.

## பெரியாரைப்பிழையாமை. ( ஙக )

பொறுப்பரென்றெண்ணிப்புரைதீர்ந்தார்மாட்டும்
வெறுப்பனசெய்யாமைவேண்டும்வெறுத்தபி
னார்க்குமருவியணிமலைநாட
னேர்க்குதல்யார்க்குமரிது.

* க *

பொன்னைகொடுத்தும்புணர்தற்கரியாரைக்
கொன்னைதலைக்கூடப்பெற்றிருந்துமன்னோ
பயனில்பொழுதாக்கழிப்பரேநல்ல
நயமிலறிவினவர்.

* உ *

அவமதிப்புமான்றமதிப்புமிரண்டு
மிகைமக்களான்மதிக்கற்பாலநயமுணாக்
கையறியாமாக்களிழிப்புமெடுத்தேத்தும்
வையார்வடித்தநூவார்.

* ௯ *

விரிநிறநாகம்விடருளதேனு
முருமின்கடுஞ்சினஞ்சேணின்றுமுட்கு
மருமையுடையவரண்சேர்ந்துமுய்யார்
பெருமையுடையார்செறின்.

* ௰ *

எம்மையறிந்திலிரெம்போல்வாரில்லென்று
தம்மைத்தாங்கொள்வதுகோளன்றுதம்மை
யரியாரேநோக்கியறனறியுஞ்சான்றோர்
பெரியாரக்கொள்வதுகோள்.

* ௧ *

( ௩௪ ) பெரியாரைப்பிழையாமை.

நளிகடற்றண்சேர்ப்பநாணிழற்போல
விளியுஞ்சிறியவர்கேண்மைவிளிவின்றி
யல்குநிழற்போலகன்றகன்றோடுமே
தொல்புகழாளர்தொடர்பு.

* ௧ *

மன்னர்திருவுமகளிரெழினலமுந்
துன்னியார் துய்ப்பர்தகல்வேண்டா துன்னிக்
குழைகொண்டுதாழ்ந்தகுளிர்மரமெல்லா
முழைதங்கட்சென்றார்க்கொருங்கு.

* ௭ *

தெரியத்தெரியுந்தெரிவிலார்கண்ணும்
பிரியப்பெரும்படர்நோய்செய்யும்பெரிய
வுலவாவிருங்கழிச்சேர்ப்பயார்மாட்டுங்
கலவாமைகோடியுறும்.

* ௮ *

கல்லாதுபோகியநாளும்பெரியவர்கட்
செல்லாதுவைகியவைகலுமொல்வ
கொடாஅதொழிந்தபகலுமுரைப்பிற்
படாஅவாம்பண்புடையார்கண்.

* ௯ *

பெரியார்பெருமைசிறுதகைமையொன்றிற்
குரியாருரிமையடக்கந்தெரியுங்காற்

செல்வமுடையாருஞ்செல்வரோதற்சேர்ந்தா
ரல்லல்களைடவெனின். * ௰ *

அ௲ ாஎ௰.

நல்வினைஞ்சேர்தல் ( ௩௫ )

---

அறியாப்பருவத்தடங்காரொடொன்றி
நெறியல்லசெய்தொழுகியவ்வநெறியறிந்து
நற்சார்வுசாரக்கெடுமேவெயின்முறுகப்
புற்பனிப்பற்றுவிட்டாங்கு.

* ௧ *

அறிமினறநெறியஞ்சுமின்கூற்றம்
பொறுமின்பிறர்கடுஞ்சொற்போற்றுமின்வஞ்சம்
வெறுமின்வினைதீயார்கேண்மையெஞ்ஞான்றும்
பெறுமின்பெரியார்வாய்ச்சொல். * ௨ *

அடைந்தார்ப்பிரிவுமரும்பிணியுங்கேடு
முடங்குடம்புகொண்டார்க்குறலாற்றொடங்கிப்
பிறப்பின்னாதென்றுணரும்பேரறிவினாரை
யுறப்புணர்கவம்மாவென்னெஞ்சு. * ௫ *

இறப்புநினையுங்காலின்னாதெனினும்
பிறப்பினையாருமுனியார்பிறப்பினுட்
பண்பாற்றுநெஞ்சத்தவர்களோடெஞ்ஞான்று
நண்பாற்றிநட்கப்பெறின். * ௬ *

ஊரங்கணநீருரவுநீர்ச்சேர்ந்தக்காற்
பேரும்பிறிதாகித்தீர்த்தமாமோருங்
குலமாட்சியில்லாருங்குன்றுபோனிற்பர்
நலமாட்சிநல்லாரைச்சார்ந்து. * ௭ *

( ௧௮ ) நல்லினஞ்சேர்தல்.

ஒண்கதிர்வாண்மதியஞ்சேர்தலாலோங்கிய
வங்கண்விசும்பின்முயலுந்தொழப்படூஉங்
குன்றியசீர்மையராயினுஞ்சீர்பெறுவர்
குன்றன்னார்கேண்மைகொளின். * ௧ *

பாலோடளாயநீர்பாலாகுமல்லது
நீராய்நிறந்தெரிந்துதோன்றாதாந்தேரிற்
சிறியார்சிறுமையுந்தோன்றாதாநல்ல
பெரியார்பெருமையைச்சார்ந்து. * ௭ *

கொல்லிரும்புனத்துக்குற்றியடைந்தபு
லொல்காவேயாகுமுழவருழுபடைக்கு
மெல்லியரேயாயினுநறசார்வுசார்ந்தார்மேற்
செல்லாவாஞ்செற்றார்சினம். * ௮ *

நிலநலத்தானந்தியநெல்லேபோற்றத்தங்
குலநலத்தாலாகுவர்சான்றோர்கலநலத்தைத்
தீவளிசென்றுசிதைத்தாங்குச்சான்றாண்மை
தீயினஞ்சேரக்கெடும். * ௯ *

மனத்தான்மறுவிலனேனுந்தாஞ்சேர்ந்த
வினத்தாலிகழப்படுவர்புனத்து
வெறிகமழ்சந்தநமும்வேங்கையும்வேமே
யெறிபுனந்தீப்பட்டக்கால். * ௰ *

அதிகாரம்: பெருமை. ( ௧௭ )

---

ஈதலிசையாதிளமைசேணீங்குதலாற்
காதலவருங்கருத்தல்லர்காதலித்
தாதுநாமென்னுமவாவினைக்கைவிட்டுப்
போவதேபோலும்பொருள்.

* ௧ *

இற்சார்வினே
மார்ந்தேமீங்கமைந்தேமென்றெண்ணிப்
பொச்சாந்தொழுகுவர்பேதையாரச்சார்வு
நின்றனபோன்றுநிலையாவெனவுணர்ந்தா
ரென்றும்பரிவதிலர்.

* ௨ *

மறுமைக்குவித்துமயலின்றிச்செய்து
சிறுமைப்படாதேநீர்வாழ்மினறிஞராய்
நின்றுழிநின்றேநிறம்வேறாங்காரண
மின்றிப்பலவுமுள.

* ௩ *

உறைப்பருங்காலத்துமூற்றுநீர்க்கேணி
யிறைத்துணினுமூராற்றுமென்பர்கொடைக்கடனுஞ்
சாஅயக்கண்ணும்பெரியார்போன்மற்றையா
ராஅயக்கண்ணுமரிது.

* ௯ *

உறுபுனறந்துலகூட்டியருமிடத்துங்
கல்லூற்றுழியூறுமாறேபோற்செல்வம்
பலர்க்காற்றிக்கெட்டுலந்தக்கண்ணுஞ்சிலர்க்காற்றிச்
செய்வர்செயற்பாலவை. * ௰ *

( ௰௮ ) பெருமை.

பெருவரைநாடபெரியார்கட்டீமை
கருநரைமேற்சூடேபோற்றோன்றுங்கருநரையைக்
கொன்றன்னவின்னாசெயினுஞ்சிறியார்மே
லொன்றானுந்தோன்றாகெடும். * ௧ *

இசைந்தசிறுமைஇயல்பிலாதார்கட்
பசைந்ததுணையும்பரிவாமசைந்த
நகையேயும்வேண்டாதநல்லறிவினார்கட்
பகையேயும்பாடுபெறும். * ௨ *

மெல்லியநல்லாருண்மேன்மையதுவிறந்
தொன்றுருட்கூறருட்குமுட்குடைமையெல்லாஞ்
சவைவருட்சாலச்சலமேநலவரு
ணன்மைவாம்பாய்விடல். * ௮ *

கடுக்கியொருவன்கடுங்குறளைபேசி
மயக்கிவிடினுமற்றப்பிர்ப்பொன்றின்றித்
துளக்கமிலாதவர்தூயமநத்தார்
விளக்கினுளொண்சுடரேபோன்று. * ௯ *

முறைறுத்துந்துத்தினைநாளுமறஞ்செய்து
பிறறுத்துத்துத்தவர்சான்றவாத்துத்து
முக்குற்றநீக்கிமுடியுமளவெல்லாந்
துக்கத்துளுீக்கிவிடும். * ௰ *

ஆ ௱௪௰.

தாளாண்மை ( ௱௧ )

கோளாற்றக்கொள்ளாக்குளத்தின்கீழ்ப்பைங்கூழ்போற்
கேளீவதுண்டுகிளைகளோதுஞ்சுவ
வாளாடுகூத்தியர்கண்போற்றடுமாறுந்
தாளாளர்க்குண்டோதவறு.

* ௧ *

ஆடுகோடாகியதரிடைநின்றதூஉங்
காழ்கொண்டகண்ணேகளிறணைக்குங்கந்தாகும்
வாழ்தலுமன்னதகைத்தேயொருவன்றான்
றாழ்வின்றித்தன்னைச்செயின். * ௨ *

உறுபுலியூனிரையின்றியொருநாட்
சிறுதேரைபற்றியுந்தின்னுமறிவினாற்
காற்றொழிலென்றுகருதற்ககையினான்
மேற்றொழிலுமாங்கேமிகும். * ௩ *

இசையாதெனினுமியற்றியோராற்றா
லசையாதுநிற்பதாமாண்மையிசையுங்காற்
கண்டிறாயலக்குங்காலைதன்சேர்ப்ப
பெண்டிரும்வாழாரோமற்று. * ௪ *

நல்லகுலமென்றுந் தீயகுலமென்றுஞ்
சொல்லளவல்லாற்பொருளில்லைத்தொல்சிறப்பி
னொண்பொருளொன்றோதவங்கல்வியாள்வினை
யென்றிவற்றானாகுங்குலம். * ௫ *

( ௪௰ ) தாளாண்மை

ஆற்றுந்துணையுமறிவினையுள்ளடக்கி
யூக்கமுரையாருணர்வுடையாரூக்க
முறுப்பினாலாராயுமொண்மையுடையார்
குறிப்பின்கீழ்ப்பட்டதுலகு.
* ௧ *
சிதலைதினப்பட்டவாலமரத்தை
மதலையாய்மற்றதன்வீழூன்றியாங்குக்
குதலைமைதந்தைகட்டோன்றிற்றான்பெற்ற
புதல்வன்மறைப்பக்கெடும்.

* ௨ * ஈனமாயில்லிருந்தின்றிவிளியினு
மானந்தலைவருவசெய்பவோயானை
வரிமுகம்புண்படுக்கும்வள்ளுகிர்நோன்றா
ளரிமாமதுகையவர்.

* அ *

திங்களநம்பீன்றதிரள்காலுளையலரி
தேங்கமிழ்நாற்றமிழந்தாஅங்கோங்கு
முயர்குடியுட்பிறப்பினென்னும்பெயர்பொறிக்கும்
பேராண்மையில்லாக்கடை. * க *

பெருமுத்தரையர்பெரிதுவந்தீயுங்
கருனைச்சோறார்வர்கயவர்கருனையைப்
பேருமறியார்நனிவிரும்புதாளாண்மை
நீருமமிழ்தாய்விடும். * ம * அ௨உ

கற்றந்தழால். ( ௪௪ )

வயாவும்வருத்தமுமீன்றக்காலேவுங்
கவாஅன்மகற்கண்டுதாய்மறந்தாஅங்
கசாஅத்தானுற்றவருத்தமுசாஅத்தன்
கேளிரைக்காணக்கெடும்.
* க *

அழன்மண்டுபோழ்தினடைந்தவர்கட்கெல்லா
நிழன்மரம்போ
னேரொப்பத்தாங்கிப்பழுமரம்போற்
பல்லார்பயன்றுய்ப்பத்தான்வருந்திவாழ்வதே
நல்லாண்மகற்குக்கடன்.

* உ *

அடுக்கின்மலைநாடதற்சேர்ந்தவரை
யெடுக்கலமென்னார்பெரியோரடுத்தடுத்து
வன்காய்பலபலகாய்ப்பினுமில்லையே
தன்காய்பொறுக்கலாக்கொம்பு.

* ௩ * உலகறியத்தீரக்கலப்பினுநில்லா
சிலபகல்லாஞ்சிற்றினத்தார்கேண்மைநிலைதிரியா
நிற்கும்பெரியோர்நெறியடையநின்றனைத்தா
லொற்கமிலாளர்தொடர்பு. * ௪ *

இன்னரினையரெமர்பிறரென்னுஞ்சொ
லென்னுமிலராமியல்பினாற்றுன்னித்
தொலைமக்குன்பந்தீர்ப்பர்மேயோர்மாட்டுத்
தலைமக்களாகற்பாலார். * ௫ *

பொற்கலத்துப்பெய்தபுலியுகிர்வான்புழுக்க
லக்காரம்பாலோடமரார்கைத்துண்டலி
னுப்பிலிப்புற்கையுயிர்போற்கிளைஞர்மாட்
டெக்கலத்தானுமினிது.
* ௬ *

நாள்வாய்ப்பெறினுந்தன்னள்ளாதாரில்லத்து
வேளாண்மைவெங்கருனைவேம்பாகுங்கேளா
யபராதப்போழ்தினடகிடுவரேனுந்
தமராயார்மாட்டேயினிது.
* ௭ *

முட்டிகைபோலமுனியாதுவைகலுங்
கொட்டியுண்பாருங்குறடுபோற்கைவிடுவர்
சுட்டுக்கோல்போலவெரியுட்புகுவரே
நட்டாரெனப்படுவார்.
* ௮ *

நறுமலர்த்தண்கோதாய்நட்டார்க்குநட்டார்
மறுமையுஞ்செய்வதொன்றுண்டோவிறுமளவு
மின்புறுவதின்புற்றெழீஇயவரொடு
துன்புறவதுன்புறுக்கால்.

* ௯ *

விருப்பிலாரில்லத்துவேறிருந்துண்ணும்
வெருக்குக்கண்வெங்கருனைவேம்பாம்விருப்புடைத்

தன்போல்வாரில்லுட்டயங்குநீர்த்தண்புற்கை
யென்போடியைந்தவமிழ்து. * ௰ *

## அதி உா௰. நட்பாராய்தல். ( சுக



கருத்துணர்ந்துகற்றறிந்தார்கேண்மையெஞ்ஞான்றுங்
குருத்திற்கரும்புதின்றற்றேகுருத்திற்
கெதிர்செலத்தின்றன்னதகைத்தரோவென்று
மதுராமிலாளர்தொடர்பு.
* க *

இற்பிறப்பெண்ணியிடைதிரியாரென்பதோர்
நற்புடைக்கொண்டமையல்லதுபொற்கேழ்
புனலொழுகப்புள்ளிரியும்பூங்குன்றநாட
மனமறியப்பட்டதொன்றன்று. * உ *

யானையனையவர்நண்பொரீஇநாயனையார்
கேண்மைகெழீஇக்கொளல்வேண்டும்யானை

யறிந்தறிந்தும்பாகனையேகொல்லுமெறிந்தவேல்
மெய்யதாவால்குழைக்குநாய். * ௩

*

பலநாளும்பக்கத்தாராயினுநெஞ்சிற்
சிலநாளுமொட்டாரோடொட்டார்பலநாளு
நீத்தாரெனக்கைவிடலுண்டோதன்னெஞ்சத்
தியாத்தாரோடியாத்ததொடர்பு. * ௪ *

கோட்டுப்பூப்போலமலர்ந்துபிற்கூம்பாது
வேட்டதேவேட்டதாநட்பாட்சிதோட்ட
கயப்பூப்போன்முன்மலர்ந்துபிற்கூம்புவாரை
நயப்பாருநட்பாருமில். * ௫ *

( சஅ )　　　நட்பாராய்தல்.

கடையாயார்நட்பிற்கமுகனையரேனை
யிடையாயார்தெங்கினனையர்தலையாயா
ரெண்ணரும்பெண்
ணைபோன்றிட்டஞான்றிட்டதே
தொன்மையுடையார்தொடர்பு.
* கூ *

கழுநீருட்காரடகேனுமொருவன்
விழுமிதாக்கொள்ளினமிழ்தாம்விழுமிய
குய்த்துவையார்வெண்சோறேயாயினுமேவாதார்
கைத்துண்டல்காஞ்சிரங்காய். * எ *

தாய்க்காற்சிறுவிரல்போனனகணியராயினு
மீக்காற்றுணையுமுதவாதார்நட்பென்னுஞ்
செய்த்தானுஞ்சென்றுகொளல்வேண்டுஞ்செய்வினைக்கும்
வாய்க்காலனையார்தொடர்பு * அ *

தெளிவிலார்நட்பிற்பகைநன்றுசாதல்
விளியாவருநோயினன்றாலளிய
விகழ்தலிற்கோறலினிதேமற்றில்ல
புகழ்தலின்வைதலேநன்று. * கூ *

மரீஇப்பலரோடுபன்னாண்முயங்கிப்
பொரீஇப்பொருட்டக்கார்க்கோடலேவேண்டும்
பரீஇயுயிர்செகுக்கும்பாம்பொடுமின்னா
மரீஇப்பின்னைப்பிரிவு. * ௰ * அ௨௱௨௰.

## நட்பிற்பிழைபொறுத்தல். ( ௨௩ )

நல்லாரெனத்தானனிவிரும்பிக்கொண்டாரை
யல்லாரெனினுமடக்கிக்கொளல்வேண்டு
நெல்லுக்குமியுண்டுநீர்க்குநுரையுண்டு
புல்லிதழ்பூவிற்குமுண்டு.

* க *

செறுத்தோறுடைப்பினுஞ்செம்புனலோடோர்
மறுத்துஞ்சிறைசெய்வர்நீர்நசைவாழ்நர்
வெறுப்பவெறுப்பச்செயினும்பொறுப்பரே

தாம்வேண்டிக்கொண்டார்தொடர்பு.

* ௨ *

இறப்பவேதீயசெயினுந்தன்னட்டார்
பொறுத்தறகுவதொன்றன்றோநிறக்கோங்
குருவவண்டார்க்குமுயர்வரைநாட
வொருவர்பொறையிருவர்நட்பு. * ௧ *

மடிதிரைதந்திட்டவான்கதிர்முத்தங்
கடுவிசைநாவாய்கரையலைக்குஞ்சேர்ப்ப
விடுதற்கரியாரியல்பிலரேனெஞ்சஞ்
சுடுதற்குமூட்டியதீ. * ௪ *

இன்னாசெயினும்விடற்பாலரல்லாரைப்
பொன்னாகப்போற்றிக்கொளல்வேண்டும்பொன்னொடு
நல்லிற்சிதைத்ததீநாடொறுநாடித்தம்
மில்லத்திலாக்குதலால். * ௫ *

( ௨௩ ) நட்பிற்பிழைபொறுத்தல்.

இன்னாசெயினும்விடுதற்கரியாரைத்
துன்னார்துறத்தறகுவதோதுன்னருஞ்சீர்
விண்குத்துநீள்வரைவெற்பகளைபவோ
கண்குத்திற்றென்றுதங்கை.

* ௬ *

இலங்குநீர்த்தண்சேர்ப்பவின்னாசெயினுங்
கலந்துபழியாணர்சான்றோர்கலந்தபிற்
நீமையெடுத்துரைக்குந்திண்ணறிவில்லாதார்
தாமுமவரிற்கடை.

* ௭ *

எதிலார்செய்ததிறப்பவேதீதெனினு
நோதக்கதென்னுண்டாநோக்குங்காற்காதல்
கழுமியார்செய்தகறங்கருவிநாட
விழுமிதாநெஞ்சத்துநின்று.

* ௮ *

தமரொன்றுதாங்கொள்ளப்பட்டவர்தம்மைத்
தமரன்மைதாமறிந்தாராயினவரைத்

தமரினுநன்குமதித்துத்தமரான்மை
தம்முளடக்கிக்கொளல்.

* ௯ *

குற்றமுமேனைக்குணமுமொருவனை
நட்டபிலுடித்திரிவேனெனட்டான்

மறைகாவாவிட்டவன்செல்வுழிச்செல்க
வறைகடல்சூழ்வையநக.          * ௰ *

அதி ௨௱௩௰.

கூடாநட்பு.

( ௭ )



செறிப்பில்பழங்கூரைசேறணையாக
விறைத்துநீரேற்றுங்கிடப்பர்கறைக்குன்றம்
பொங்கருவிதாழும்புனல்வரைநன்னாட
தங்கருமமுற்றுந்துணை.          * *

சீரியார்கேண்மைசிறந்தசிறப்பிற்றாய்
மாரிபோன்மாண்டபயத்ததாமாரி

வறந்தக்காற்போலுமேவாலருவிநாட
சிறந்தக்காற்சீரிலார் நட்பு.

* ௨ *

நுண்ணுணர்விறொடுகூடிநுகர்வுடைமை
விண்ணுலகேயொக்கும்விழைவிற்ற நுண்ணூ
லுணர்விலராகிய ஆஜியமில்லார்ப்
புணர்தனிரயத்துளொன்று.

* ௩ *

பெருகுவதுபோலத்தோன்றிவைத்திப்போ
வொருபொழுதுஞ்செல்லாதேநந்துமருகெல்லாஞ்
சந்தநநீள்சோலைச்சாரன்மலைநாட
பந்தமிலாளர்தொடர்பு.

* ௪ *

செய்யாதசெய்துநாமென்றலுஞ்செய்வதனைச்
செய்யாதுதாழ்த்துக்கொண்டோட்டலுமெய்யாக
வின்புறூஉம்பெற்றிகழ்ந்தார்க்குமந்நிலையே
துன்புறூஉம்பெற்றிதரும். * ௫ *

( ௩அ ) கூடாநட்பு.

ஒருநீர்ப்பிறந்தொருங்குநீண்டக்கடைத்தும்
விரிநீர்க்குவளையையாம்பலொக்கல்லா
பெருநீரார்கேண்மைகொளினுநீரல்லார்
கருமங்கள்வேறுபடும்.

* ௬ *

முற்றற்சிறுமந்திமுற்பட்டதந்தையை
நெற்றுக்கண்டன்னவிரலான்றுயிர்த்திட்டுக்
குற்றிப்பறிக்குமலைநாடவின்னாதே
யொற்றுமைகொள்ளாதார்நட்பு.

* ௭ *

முட்டுற்றபோழ்தின்முடுகியென்னாருயிரை
நட்டானொருவன்கைநீட்டேனேனட்டான்
கடிமனைகட்டழித்தான்செல்வுழிச்செல்க
நெடுமொழிவையநக.

* அ *

ஆன்படுநெய்பெய்கலனுளதுகளைந்து
வேம்படுநெய்பெய்தனைத்தரோதேம்படு
நல்வரைநாடநயமுணர்வார்நண்பொரீஇப்
புல்லறிவினாரொடுநட்பு.

* ௯ *

உருவிற்கமைந்தான்கணோராண்மையின்மை
பருகற்கமைந்தபாலீராளாயற்றே
தெரிவுடையார்தீயினத்தராகுதலைகம்
விரிபெடையோடாடிவிட்டற்று. * ௰ * ஆ ௨௱௪௰.

## அறிவுடைமை.



பகைவர்பணிவிடநோக்கித்தகவுடையார்
தாமேயுநாணித்தலைச்செல்வார்காணு
யிளைப்பிறையாயக்காற்றிங்களைச்சேரா
தணங்குருத்துப்பினார.

நளிகடற்றண்சேர்ப்பநல்கூர்ந்தமக்கட்
கணிகலமாவ டக்கம்பணிவிற்சீர்

மாத்திரையின் றிறடக்குமேல்வாழுமூர்
கோத்திரங்கூறப்படும்.

எந்நிலத்து வித்திடினுங் காஞ்சிரங்காழ்தெங்காகா
தென்னாட்டவருஞ்சுவர்க்கம்புகுதலாற்
றன்னாற்றானாகு மறுமைவடதிசையுங்
கொன்னாளர்சாலப்பலர். * ௫ *

வேம்பினிலையுட்கனியினும்வாழைதன்
றீஞ்சுவையாதுந்திரியாதாமாங்கே
யினந்தீதெனினுமியல்புடையார்கேண்மை
மனந்தீதாம்பக்கமரிது. * ௬ *

கடல்சார்ந்துமின்னீர்பிறக்குமலைசார்ந்து
முப்பீண்டுவாரிபிறத்தலாற்றத்த
மினத்தனையரல்லரெறிகடற்றண்சேர்ப்ப
மனத்தனையர்மக்களென்பார். * ௭ *

( ௪௧ )

* ௧ *

* ௨ *

பாரா அரைப்புன்னைபடுகடற்றண்சேர்ப்ப
வொரா அறுமொட்ட இஞ்செய்பவோ நல்ல
மருஉச்செய்தியார்மாட்டுந் தங்குமறத்தார்
விராஅய்ச்செய்யாமை நன்று. * ௬ *

உணாவுணருமுணர்வுடையாரைப்
புணாப்புணருமாமின்பம்புணரிற்
றெரியத்தெரியுந்தெரிவிலாதாரைப்
பிரியப்பிரியுமாநோய். * ௭ *

நன்னிலைக்கட்டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக்கீழிடுவானுநிலையினு
மேன்மேலுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச்செய்வானுந்தான். * ௮ *

கருமவரிசையாற்கல்லாதார்பின்னும்
பெருமையுடையாருஞ்சேறலருமாபி
ஞேதமாற்றுமொலிகடற்றண்சேர்ப்ப
பேதைமையன்றதறிவு. * ௯ *

கருமமுமுள்படாப்போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கேசெய்பாவொருநிலையே
முட்டின்றிமூன் றமுடியுமேலஃதெண்ப
பட்டினம்பெற்றகலம். * ம * ஆ உாருய.

அறிவின்மை.

( ௩௪ )

நூன் ணுணர்வின்மைவறுமையஃ துடைமை
பண்ணப்பணைத்தபெருஞ்செல்வமெண் ணுங்காற்
பெண்ணவாயாணிழந்தபேடியணியாளோ
கண்ணவாத்தக்ககலம்.
* க *

பல்லான்றகேள்விப்பய னுணர்வார்பாடழிந்
தல்லலுழப்பதறிதிரேற்றெல்சிறப்பி
னுவின்கிழத்தியுறைதலாற்சேராளே
பூவின்கிழத்திபுலந் து.

* உ *

கல்லென்றுதந்தைகழறவதனையோர்
சொல்லென்றுகொள்ளாதிகழ்ந்தவன்மெல்ல
வெழுத்தோலைபல்லார்முன்னீட்டவிளியா
வழுக்கோலைக்கொண்டுவிடும். * ௯ *

கல்லாதுநீண்டவொருவனுலகத்து
நல்லறிவாளரிடைப்புக்குமெல்ல
விருப்பினுநாயிருந்தற்றேயிராஅ
துரைப்பினுநாய்குரைத்தற்று. * ௰ *

புல்லாப்புன்கோட்டிப்புலவரிடைப்புக்குக்
கல்லாதசொல்லுங்கடையெலாங்கற்ற
கடாஅயினுஞ்சான்றவர்சொல்லார்பொருண்மேற்
படாஅவிடுபாக்கறிந்து.

* ௩ * (௩௨) அறிவின்மை.

கற்றறிந்தநாவினார்சொல்லார்தஞ்சோர்வஞ்சி
மற்றையராவார்பகர்வர்பனையின்மேல்
வற்றியவோலைகலகலக்குமெஞ்ஞான்றும்
பச்சோலைக்கில்லையொலி.

* ௬ *

பன்றிக்கூழ்ப்பத்தரித்தேமாவடுத்தச்சற்று
என்றறியாமாந்தர்க்கறத்தாறுரைக்குங்கால்
குன்றின்மேற்கொட்டுந்தறிபோற்றலைஞாற்று
சென்றிசைபாவாகுஞ்செவிக்கு. * ௭ *

பாலாற்கழீஇப்பலநாளுணக்கினும்
வாலிதாம்பக்கமிருந்தைக்கிருந்தன்று
கோலாற்கடாஅய்க்குறினும்புகலொல்லா
நோலாவுடம்பிற்கறிவு. * ௮ *

பொழிந்தினிதுநாறினும்பூமிசைதல்செல்லா
திழிந்தவைகாமுறூஉமீப்போலிழிந்தவை
தாங்கலந்தநெஞ்சினார்க்கென்னாகுந்தக்கார்வாய்த்
தேன்கலந்ததேற்றச்சொற்றேர்வு. * ௯ *

கற்றாருரைக்குங்கசடறுநுண்கேள்வி
பற்றாதுதன்னெஞ்சுதைத்தலான்மற்றுமோர்
தன்போலொருவன்முகநோக்கித்தானுமோர்
புன்கோட்டிகொள்ளுமாங்கீழ். * ௰ * ஆ உ௱௯௰.

## நன்றியில்செல்வம்.

அருகலதாகிப்பலபழுத்தக்கண்ணும்
பொரிதாள்விளவினைவாவல்குறுகா
பெரிதணியராயினும்பீடிலார்செல்வங்
கருதுங்கடப்பாட்டதன்று.

* ௧ *

அள்ளிக்கொள்வன்னகுறுமுகிழவாயினுங்
கள்ளிமேற்கைநீட்டார்சூடும்பூவன்மையாற்
செல்வம்பெரிதுடையாராயினுங்கீழ்களை
நள்ளாரறிவுடையார்.

* ௨ *

மல்குதிரையகடற்கோட்டிருப்பினும்
வல்லூற்றுவரிற்கிணற்றின்கட்சென்றுண்பர்
செல்வம்பெரிதுடையாராயினுஞ்சேட்சென்று
நல்குவார்கட்டேநசை.

* ௩ *

புணர்கடற்சூழ்வையத்துப்புண்ணியமோவேறே
யுணர்வதுடையாரிருப்பவுணர்விலா
வட்டும்வழுதுணையும்போல்வாரும்வாழ்வரே
பட்டுந்துகிலுமுடுத்து.

* ௪ *

நல்லார்நயவரிருப்பநயமிலாக்
கல்லார்க்கொன்றாகியகாரணந்தொல்லை
வினைப்பயனல்லதுவேறில்லைநுண்ணாய்
நினைப்பவருவதொன்றில்.

* ௫ *

## ( ௫௪ ) நன்றியில்செல்வம்

நாருத்தகடேபோனன்மலர்மேற்பொற்பாவாய்
நீருய்நிலத்துவிளியரோவேருய
புன்மக்கள்பக்கம்புகுவாய்நீபொன்போலு
நன்மக்கள்பக்கந்துறந்து.

* ௬ *

நயவார்கணல்குாவுநாணின்றுகொல்லோ
பயவார்கட்செல்வம்பரம்பப்பயின்கொல்
வியவாய்காண்வேற்கண்ணாயிவ்விரண்டுமாங்கே
நயவாதுநிற்குநிலை.

* ௭ *

வலவைகளல்லாதார்காலாறுசென்று
கலவைகளுண்டுகழிப்பர்வலவைகள்
காலாறுஞ்செல்லார்கருனையாற்றுய்ப்பவே
மேலாறுபாயவிருந்து. * ௮ *

பொன்னிறச்செந்நெற்பொதியொடுபீள்வாட
மின்னொளிர்வானங்கடலுள்ளுங்கான்றுகுக்கும்
வெண்மையுடையார்விழுச்செல்வமெய்தியக்கால்
வண்மையுமன்னதகைத்து. * ௯ *

ஓதியுமோதாருணர்விலாரோதா
தொதியனையாருணர்வுடையார்தூய்தாக
நல்கூர்ந்துஞ்செல்வரிரவாதார்செல்வரு
நல்கூர்ந்தாரீயாரெனின். * ௰ *

ஆ உ௱௭௰

## ஈயாமை. ( ௫௫ )

—o—

நட்டார்க்குநள்ளாதவர்க்குமுளவாயா
லட்டதுபாத்துண்டலட்டுண்டலட்ட
துடைத்திருந்துண்டொழுகுமாவதின்மாக்கட்
கடைக்குமாமாண்டைக்கதவு.

* ௧ *

எத்துணையானுமிழைந்தவளவின்றற்
சிற்றறஞ்செய்தார்தலைப்படுவர்மற்றைப்
பெருஞ்செல்வமெய்தியக்காற்பின்னறிதுமென்பா
ராழிந்தார்பழிகடலத்துள்.

* ௨ *

ஆய்த்துக்கழிபான்றறவோர்க்கொன்றீகலான்
வைத்துக்கழியுமடவோனைவைத்த
பொருளுமவனைநகுமேயுலகத்
தருளுமவனைநகும்.

* ௩ *

கொடுத்தலுந்துய்த்தலுந்தேற்றாவிடக்குடை
யுள்ளத்தான்பெற்றபெருஞ்செல்வமில்லத்
துருவுடைக்கந்நியைப்போலப்பருவத்தா
லேதிலான்றுய்க்கப்படும்.

* ௪ *

ன்றிநீர்ப்பெருங்கடலெய்தியிருந்து
மறுநீர்ச்சிறுகிணற்றூறல்பார்த்துண்பார்
மறுமையறியாதாராக்கத்திற்சான்றோர்
கழிநல்குரவேதலை.

* ௫ *

( ௫௬ ) நயாமை.

ள்வதெனதென்றிருக்குமேழைபொருளை
வெனதெனதென்றிருப்பன்யானுந்தனதாயிற்
றூனுடையனைவழங்கான்பயன்றுவ்வான்
யானுமதனையது.

* ௬ *

விழுங்காதசெல்வரினல்கூர்ந்தாருய்ந்தா
ரிழந்தாரெனப்படுதலுய்ந்தாருழந்ததனைக்
காப்புய்ந்தார்கல்லுதலுய்ந்தார்தங்கைநோவ
யாப்புய்ந்தாருய்ந்தபல.

* ௭ *

தனதாகத்தான்கொடான்றாயத்தவருந்
தமதாயபோழ்தேகொடாஅர்தனதாக
முன்னேகொடுப்பினவர்கடியார்தான்கடியான்
பின்னையவர்கொடுக்கும்போழ்து. * அ *

இரவலர்கன்றாகவீவாராவாக
விரகிற்சுரப்பதாம்வண்மைவிரகின்றி
வல்லவரூன்றவடியாபோல்வாய்வைத்துக்
கொல்லச்சுரப்பதாங்கீழ். * கூ *

ஈட்டலுந்துன்பமற்றீட்டியவொண்பொருளைக்
காத்தலுமாங்கேகெடுந்துன்பங்காத்தல்-
குறைபடிற்றுன்பங்கெடிற்றுன்பந்துன்பக்
குறைபதிமற்றைப்பொருள். * ௰ * ஆ௨ உாஅ௰

## இ ன் மை

( ௬௯ )

---

அத்திட்டகூறையரைச்சுற்றிவாழினும்
பத்தெட்டுடைமைபலருள்ளும்பாடெய்து

மெய்த்தகுடிப்பிறந்தக்கண்ணுமொன்றில்லாதார்

செத்தபிணத்திற்கடை.

* ௧ *

நீரினுமுண்ணினுநெய்யென்பர்நெய்யினும்
யாருமறியார்புகைநுட்பந்தேரி
னிரப்பிடும்பையாளன்புகுமேபுகையும்
புகற்கரியபூழைநுழைந்து.

* ௨ *

கல்லோங்குயர்வரைமேற்காந்தண்மலராக்காற்
செல்லரவாஞ்செம்பொறிவண்டினங்கொல்லைக்
கலாஅற்கிளிகடியுங்கானகநாட
விலாஅஅர்க்கில்லைத்தமர்.

* ௩ *

உண்டாயபோழ்திலுடைற்றுழிக்காகம்போற்
றொண்டாயிரவர்தொகுபவேவண்டாய்த்
திரிதருங்காலத்துத்தீதிலிரோவென்பா
ரொருவருமிவ்வுலகத்தில்.

* ௪ *

பிறந்தகுலமாயும்பேராண்மைமாயுஞ்
சிறந்ததங்கல்வியுமாயுங்கறங்கருவி
கன்மேற்கழூஉங்கணமலைநன்னாட
வின்மைதழுவப்பட்டார்க்கு.

* ௫ *

( ௫அ ) இன்மை.

உள்கூர்பசியா லுழைநகைஇச்சென்றார்கட்
குள்ளாரிருந் துமொன்றாற்றா தாலுள்ளா
ரிருந்துயிர்கொன்னேகழியாது தான்போய்
விருந்தினனாதலேநன்று. * ௬ *

நீர்மையேயன்றிநிரம்பவெழுந்ததங்
கூர்மையுமெல்லாமொருங்கிழப்பர்கூர்மையின்
முல்லையலைக்குமெயிற்றாய்நிரப்பென்னு
மல்லலடையப்பட்டார்.

* ௭ *

இட்டாற்றுப்பட்டொன்றிரந்தவர்க்காற்றாது
முட்டாற்றுப்பட்டுமுயன்றுள்ளார்வாழ்தலி
னெட்டாற்றுச்சென்றுநிரைமனையிற்கைந்நீட்டுங்
கெட்டாற்றுவாழ்க்கையேநன்று

* அ * கடகஞ்செறிந்ததங்கைகளால்வாங்கி

யடகுபறித்துக்கொண்டட்டுக்குடைகலனா
வுப்பிலிவெந்தைதின்றுள்ளற்றுவாழ்பவே
துப்புரவுசென்றுலந்தக்கால். * ௯ *

ஆர்த்தபொறியவணிகிளர்வண்டினம்
பூத்தொழிகொம்பின்மேற்செல்லாவாநீர்த்தருவி
தாழாவுயர்சிறப்பிற்றண்குன்றநன்னாட
வாழாதார்க்கில்லைத்தமர். * ௰ * ஆக ௨௱௯௰.

## மாநம். (௩௰)



திருமதுகையாகத்திறனிலார்செய்யும்
பெருமிதங்கண்டக்கடைத்துமெரிமண்டிக்
கானந்தலைப்பட்டதீப்போற்கனலுமே
மாநமுடையார்மநம்.

* ௧ *

என்பாயுகினுமியல்பிலார்பின்சென்று
தம்பாடுரைப்பரோதம்முடையார்தம்பா
டுரையாமைமுன்னுணருமொண்மையுடையார்க்
குரையாரோதாமுற்றநோய்.

* ௨ *

யாமாயினெம்மில்லங்காட்டுதுந்தாமாயிற்

காணவேகந்தபழியுமென்பார்போறூணிப்

புறங்கடைவைத்தீவர்சோறுமதனால்
மறந்திடுகசெல்வர்தொடர்பு.

* க *

இம்மையுநன்றாமியனெறியுங்கைவிடா
தும்மையுநல்லபயத்தலாற்செம்மையி
ணைங்குடைமுங்கதுப்பிறுய்நன்றேகாண்
மானமுடையார்மதிப்பு.

* ௨ *

பாவமுமேனைப்பழியும்படவருவ
சாயினுஞ்சான்றவர்செய்கலார்சாத
லொருநாளொருபொழுதைத்துன்பமவைபோ
லருநவையாற்றுதலின்று.

* ௩ *

( ௩௰ ) மானம்.

மல்லன்மாஞாலத்துவாழ்பவருளெல்லாஞ்
செல்வரெனினுங்கொடாதவர்நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக்கண்ணும்பெருமுத்தரையரே
செல்வரைச்சென்றிரவாதார்.

* ௬ *

கடையெலாங்காய்பசியஞ்சுமற்றேனை
யிடையெலாமின்னாமையஞ்சும்புடையாந்த
விற்புருவவேனெடுங்கண்ணாய்தலையெல்லாஞ்
சொற்பழியஞ்சிவிடும்.

* ௭ *

நல்லர்பெரிதளியர்நல்கூர்ந்தாரென்றெள்ளிச்
செல்வர்சிறுநோக்குநோக்குங்காற்கொல்லை
னுலைபூதுந்தீயேபோலுள்கனலுங்கொல்லோ
தலையாயசான்றோர்மநம்.

* ௮ *

நச்சியார்க்கீயாமைநாணன்றுநாணாளு
மச்சத்தானாணுதனாணன்றுமெச்சத்தின்
மெல்லியராகித்தம்மேலாயார்செய்தது
சொல்லாதிருப்பதுநாண்.

* ௯ *

கடமாதொலைச்சியகானுறைவேங்கை
யிடம்வீழ்ந்ததுண்ணாதிறக்குமிடமுடைய
வானகங்கையுறினும்வேண்டார்விழுமியோர்
மானமழுங்கவரின். * ௩ *

அ. நா.

## இரவச்சம். (௩௧)

---

நம்மாலேயாவரிந்நல்கூர்ந்தாரெஞ்ஞான்றுந்
தம்மாலாமாக்கமிலரென்றுதம்மை
மருண்டமனத்தார்பின்செல்பவோதாமுந்
தெருண்டவறிவினவர்.

* ௧ *

இழித்தக்கசெய்தொருவனாவுணலிற்
பழித்தக்கசெய்யான்பசித்தறவறோ
விழித்திமைக்குமாத்திரையன்றோவொருவ
னழித்துப்பிறக்கும்பிறப்பு.

* ௨ *

இல்லாமைகந்தாவிரவு துணிந்தொருவர்
செல்லாருமல்லர்சிறுநெறிபுல்லா

வகம்புகுமினுண்ணுமினென்பவர்காட்டல்லான்
முகம்புகுதலாற்றுமோமேல்.

* ௩ *

திருத்தன்னைநீப்பினுந்தெய்வஞ்செறினு
முருத்தமனத்தோடுயர்வுள்ளினல்லா
லருத்தஞ்செறிக்குமறிவிலார்பின்சென்
றெருத்திறைஞ்சிநில்லாதாமேல்.

* ௪ *

கரவாததிண்ணன்பிற்கண்ணன்னார்கண்ணு
மிரவாதுவாழ்வதாம்வாழ்க்கையிரவினை
யுள்ளுங்காலுள்ளமுருகுமாலென்கொலோ
கொள்ளுங்காற்கொள்வார்குறிப்பு.

* ௫ *

( கூஉ ) இரவச்சம்.

இன்றுவிளையகவினியவொழிகென்று
தன்னையேதானிரப்பத்தீர்வதற்கென்னைகொல்
காதல்கவற்றுமநத்திறுற்கண்பாழ்பட்
டேதிலவனையிரவு.

* கூ *

மின்றும்புதியார்பிறப்பிறுமில்வுலகத்
தென்றுமவனேபிறக்கலான்குன்றின்
பரப்பெலாம்பொன்னெழுகும்பாயருவிநாட
விரப்பாரையெள்ளாமகன்.

* எ *

புறத்துத்தன்னின்ஸைநலியவகத்துத்தன்
னன்ஞாநநீக்கிநிறீஇயொருவனை
யீயாயெனக்கென்றிரப்பானேலந்திஃயே
மாயானேமாற்றிவிடின்.

* அ *

ஒருவரொருவனாச்சார்ந்தொழுகலாற்றி
வழிபடுதல்வல்லுதலல்லாற்பரிசழிந்து
செய்யீரோவென்னுமென்னுஞ்சொற்கின்றே
பையத்தான்செல்லுநெறி. * ௯ *

பழைமைகந்தாகப்பசைந்தவழியே
கிழமைதான்யாதானுஞ்செய்கிழமை

பொருஉவாவொன்றிற்பொத்தித்தந்நெஞ்சத்
தருஅச்சுடுவதோர்தீ. * ௰ *

ஆ ௬௱௰.

அவையறிதல். ( ௬௱ )

———

மெய்ஞ்ஞானக்கோட்டியுறழ்வழிவிட்டாங்கோ
ரஞ்ஞானந்தந்திட்டுவாங்கறத்துழாய்க்
கைஞ்ஞானங்கொண்டொழுகுங்காரறிவாளர்முன்
சொன்ஞானஞ்சோரவிடல். * ௧ *

நாப்பாடஞ்சொல்லிநயமுணர்வார்போற்செறிக்குந்
தீப்புலவற்சேரார்செறிவுடையார்தீப்புலவன்
கோட்டியுட்குன்றக்குடிப்பழிக்குமல்லாக்காற்
றோட்புடைக்கொள்ளாவெழும்.

* உ *

சொற்றாற்றுக்கொண்டுசுனைத்தெழுதல்காமுறுவர்
கற்றாற்றல்வன்மையுந்தாந்தேற்றார்கற்ற
செல்வுரைக்குமாறறியார்தோற்பதறியார்
பலவுரைக்குமாந்தர்பலர். * ௩ *

கற்றதூஉமின்றிக்கணைக்காயர்பாடத்தாற்
பெற்றதாம்பேதையோர்சூத்திரமற்றதனை
நல்லாரிடைப்புக்குநாணாதுசொல்லித்தன்
புல்லறிவுகாட்டிவிடும்.

* ௪ *

வென்றிப்பொருட்டால்விலங்கொத்துமெய்கொள்ளார்
கன்றிக்கறுத்தெழுந்துகாய்வாரோடொன்றி
யுரைவித்தகமெழுமார்காண்பவவையுட்
சுரைவித்துப்போலுந்தம்பல். * ௫ *

பாடமேயோதிப்பயன்றெரிதறேற்றா
மூடர்முனிதக்கசொல்லுங்காற்கேடருஞ்சீர்ச்
சான்றோர்சமழ்த்தனர்நிற்பவேமற்றவரை
யீன்றாட்கிறப்பப்பரிந்து.

* ௬ *

பெறுவதுகொள்பவர்தோள்போனெறியட்டுக்
கற்பவர்க்கெல்லாமெளியநூன்மற்றம்
முறிபுணாமேனியருள்ளம்போன்றியார்க்கு
மறிதற்கரியபொருள்.

* ௭ *

புத்தகமேசாலத்தொகுத்தும்பொருடெரியா
ருய்த்தகமெல்லாநிறைப்பினுமற்றவற்றைப்

போற்றும்புலவரும்வேறேபொருடெரிந்து
தேற்றும்புலவரும்வேறு.

* அ *

பொழிப்பகலநுட்பநூலெச்சமிந்நான்கிற்
கொழித்தகலங்காட்டாதார்சொற்கள்பழிப்பி
னிரையாமாசேக்குநெடுங்குன்றநாட
வுரையாமோநூலிற்குநன்கு. * கூ *

இற்பிறப்பில்லாரெனைத்துநூல்கற்பினுஞ்
சொற்பிறரைக்காக்குங்கருவியரோவிற்பிறந்த
நல்லறிவாளர்நவின்றநூறேற்றார்
புல்லறிவுதாமறிவதில். * ம * அ௲ ௬௱௨ம.

புல்லறிவாண்மை. (கூ௫)

---

அருளினறமுரைக்குமன்புடையார்வாய்ச்சொற்
பொருளாகக்கொள்வர்புலவர்பொருளல்லா
வேழையதனையிகழ்ந் துரைக்கும்பாற்கூழை
மூழைசுவையுணாரதாங்கு.

௧

அவ்வியமில்லாறத்தாறுரைக்குங்காற்
செவ்வியல்லார்செவிகொடுத்துங்கேட்கலார்

கவ்வித்தோறின்னுங்குணங்கள்நாய்பாற்சோற்றின்
செவ்விகொளமேற்றுறுதாங்கு.

* உ *

இமைக்குமளவிற்றம்பின்னுயிர்போமார்க்க
மெனைத்தானுந்தாங்கண்டிருந்துந்தினைத்துணையு
நன்றியுரிகல்லாநாணின்மடமாக்கள்
பொன்றிலென்பொனருக்காலென்.

* ௩ *

உளநாள்சிலவாலுயிர்க்கேமமின்றாற்
பலர்மன்னுந்தூற்றும்பழியாற்பலருள்ளுங்
கண்டாரோடெல்லாநகாஅதெவனொருவன்
றண்டித்தனிப்பகைகோள்.

* ௪ *

எய்திருந்தவவைமுன்னர்ச்சென்றெள்ளி
வைதாரென்றுவனென்றுவனைவைய
வயப்பட்டான்வானாவிருப்பானேல்வைதான்
வியத்தக்கான்வாழுமெனின்.

* ௫ *

( ௩௩ ) புல்லறிவாண்மை

மூப்புமேல்வாராமைமுன்னேயறவினையை
ஊக்கியதன்கண்முயலாதானூக்கிப்
புறத்திருபோகென்னுமின்னாச்சொலில்லுட்
டொழுத்தையார்கூறப்படும். * ௬ *

தாமேயுமின்புறார்தக்கார்க்குநன்றாற்று
ஏமஞ்சார்நன்னெறியுஞ்சேர்கலார்தாமயங்கி
யாக்கத்துட்டூங்கியவத்தமேவாழ்நாளைப்
போக்குவார்புல்லறிவினார்.
* ௭ *

சிறுகாலையேதமக்குச்செல்வுழிவல்சி

யிறுகிறுகத்தோட்கோப்புக்கொள்ளாரி
றுகிறுகிப்
பின்னறிவாமென்றிருக்கும்பேதையார்கைகாட்டும்
பொன்னும்புளிவிளங்காயாம். * ௮ *

வெறுமையிடத்தும்விழுப்பிணிப்போழ்து
மறுமைமறத்தாரோயாஙிம்றுமையை

பைந்தொடியனைத்தானுமாற்றியகாலத்துச்
சிந்தியார்சிற்றறிவினர்.

* ௯ *

என்னைமற்றிவ்வுடம்புபெற்றுமறநினையார்
கொன்னேகழிப்பர்தம்வாழ்நாளையன்றோ
வானிறந்தகாதற்றம்மாருயிரன்னார்க்
கொளவிழைக்குங்கூற்றமுங்கண்டு. * ௰ *  ஆ௲ ஙாகம.

பேதைமை. ( ௯௨ )

---

கொலைகுருலையேற்றித்தீமடுப்பவாமை
நிலைபதியாகத்நீர்படிந்தாடியத்றே
கொலைவல்பெருங்கூற்றங்கோட்பார்ப்பவீண்டை
வலையகத்துச்செம்மாப்பார்மாண்பு.

* க *

பெருங்கடலாடியசென்றுமொருங்குட
ஞெசையவிர்தபின்றுடுதுமென்றற்று
விற்செய்குறைவினைநீக்கியறவினை
மற்றறிவாமென்றிருப்பார்மாண்பு.

* உ *

குலந்தவங்கல்விகுடிமைமூப்பைந்தும்
விலங்காமலெய்தியக்கண்ணுநலஞ்சான்ற
வ்டையறுதொல்சீருலகமறியாமை
நெய்யிலாப்பாற்சோற்றினேர்.

* ங *

கன்னனிநல்கடையாயமாக்களிற்
சொன்னனிதாமுணராவாயினும்பின்னினியே

நிற்றவிருத்தல்கிடத்தலியங்குதலென்
றற்றவர்க்குத்தாமுதவலான்.

* ௬ *

பெறுவதொன்றின்றியும்பெற்றானேபோலக்
கறுவுகொண்டேலாதார்மாட்டுங்கறுவினாற்
கோத்தின்னாகூறியுரையாக்காற்பேதைக்கு
நாத்தின்னுநல்லசுனைத்து. * ௫ *

## (௩௪) பேதைமை.

தங்கண்மரபில்லார்பின்சென்றுதாமவரை
யெங்கண்வணக்குதுமென்பவர்புன்கேண்மை
நற்றளிர்ப்புன்னைமலருங்கடற்சேர்ப்ப
கற்கிள்ளிக்கையிழந்தற்று.
* ௧ *

ஆகாதெனினுமகத்துநெய்யுண்டாகிற்
போகாதெறும்புபுறஞ்சுற்றும்யாதுங்
கொடாஅரெனினுமுடையாரைப்பற்றி
விடா அருலகத்தவர்.
* ௭ *

நல்லவைநாடொறுமெய்தாறஞ்செய்யா
ரில்லாதார்க்கியார்தான் றடிகலாரெல்லா
மினியார்தோள்சேராரிசைபடவாழார்
முனியார்கொருமம்வாழுநாள்.

* அ *

விழைந்தொருவர்தம்மைவியப்பவொருவர்
விழைந்திலேமென்றிருக்குங்கேண்மைதழங்குருத்
யாய்திரைசூழ்வையம்பயப்பினுமின்றேதே
யாய்நலமில்லாதார்மாட்டு. * கூ *

கற்றனவுங்கண்ணகன்றசாயனுமிற்பிறப்பும்
பக்கத்தார்பாராட்டப்பாடெய் துந்தானுரைப்பின்
மைத்துனர்பல்கிமருந்திற்றணியாத
பித்தனென்றெள்ளப்படும். * ய * ஆ_ கூாசய.

கீழ்மை. ( கூசு

கப்பிகடவதாக்காலைத்தன்வாய்ப்பெயினுங்
குப்பைகிளைப்போவாக்கோழிபோன்மிக்க
சுரம்பொறிந்த நூல்விரித்துக்காட்டினுங்கீழ்தன்

மதம்புரிந்தவாறேமினும். * ௧ *

கூழாயகொண்டுகசடற்றோர்தஞ்சாரற்
றூழாதுபோவாமெனவுரைப்பிற்கீழ்தா
னுழங்குவாமென்றெழுந்துபோமாமஃதன்றி
மறங்குமாமற்றென்றுரைத்து. * ௨ *

பெருநடைதாம்பெறினும்பெற்றிபிழையா
தொருநடையராகுவர்சான்றோர்பெருநடை
பெற்றக்கடைத்தும்பிறங்கருவிநன்னாட
வற்றாமொருநடைகீழ். * ௩ *

இனியனைத்தேயாயினுஞ்செய்தநன்றுண்டாற்
பனையனைத்தாவுள்ளுவர்சான்றோர்பனையனைத்
தென்றுஞ்செயினுமிலங்கருவிநன்னாட
நன்றிலநன்றறியார்மாட்டு. * ௪ *

பொற்கலத்தூட்டிப்புறந்தரினுநாய்பிற
ரெச்சிற்கிமையாதுபார்த்திருக்குமச்சீர்
பெருமையுடைத்தாக்கொளினுங்கீழ்செய்யுங்
கருமங்கள்வேறுபடும். * ௫ *

சக்கரச்செல்வம்பெறினும்விழுமியோ
ரெக்காலுஞ்சொல்லார்மிகுதிச்சொலெக்காலு
முந்திரிமேற்காணிமிகுவதேற்கீழ்தன்னை
யிந்திரனாவெண்ணிவிடும்.

* ௬ *

மைதீர்பசும்பொன்மேன்மாண்டமணியழுத்திச்
செய்ததெனினுஞ்செருப்புத்தன்காற்கேயா
மெய்தியசெல்வத்தாராயினுங்கீழ்களைச்
செய்தொழிலாற்காணப்படும்.

* ௭ *

கடுக்கெனச்சொல்வற்றாங்கண்ணோட்டமின்றா
மிடுக்கண்பிறர்மாட்டுவக்குமடுத்தடுத்து
வேகமுடைத்தாம்விறன்மலைநன்றுடை
வேகுமாமெள்ளுமாங்கீழ்.

* ௮ *

பழையரிவரொன்றுபன்னாட்பின்னிற்பி
னுழையினியராகுவர்சான்றோர்விழையாதே
கள்ளுயிர்க்குநெய்தற்கணைகடற்றண்சேர்ப்ப
வெள்ளுவர்கீழாயவர். * க *

கொய்புற்கொடுத்துக்குறைத்தென்றுந்திறறினும்
வையம்பூண்கல்லாசிறுகுண்டையயகே

னெய்தியசெல்வத்தாயினுங்கீழ்களைச்
செய்தொழிலாற்காணப்படும். * ய *

ஆ காரம். க ய ல ம . ( வக ]

---

ஆர்த்தவறிவினாண்டிளையராயினுங்
காத்தோம்பித்தம்மையடக்குபமூத்தொறூஉந்
தீத்தொழிலேகன்றித்திரிதத்தெருளவேபோற்
போத்தரார்புல்லறிவினார். * க *

செழும்பெரும்பொய்கையுள்வாழினுமென்றும்
வழும்பறுக்ககில்லாவாந்தேரைவழும்பில்சீர்
நூல்கற்றக்கண்ணுநுணுக்கமொன்றில்லாதார்
தேர்கிற்கும்பெற்றியரிது. * ௨ *

கணமலைநன்னாடகண்ணின்றொருவர்
குணனேயுங்கூறற்கரிதாற்குணனழுங்கக்
குற்றமுழைநின்றுகூறுஞ்சிறியவர்கட்
கெற்றாலியன்றதோநா. * ௩ *

கோடேந்தகலல்குற்பெண்டிர்தம்பெண்ணீர்மை
சேடியர்போலச்செயறேற்றார்கூடிப்
புதுப்பெருக்கம்போலத்தம்பெண்ணீர்மைகாட்டி
மதித்திறப்பர்மற்றையவர். * ௪ *

தளிர்மேலேநிற்பினுந்தட்டாமற்செல்லா
உளிநீரர்மாதோகயவரளிநீரார்க்
கென்னானுஞ்செய்யாரெனைத்தானுஞ்செய்பவே
யின்னாங்குசெய்வார்ப்பெறின். * ௫ *



## கயமை.

மலைநலமுள்ளுங்குறவன்பயந்த
விளைநிலமுள்ளுமுழவன்சிறந்தொருவர்
செய்தநன்றுள்ளுவர்சான்றோர்கயந்தன்னை
வைததையுள்ளிவிடும். * ௬ *

ஒருநன்றிசெய்தவர்க்கொன்றியெழுந்த
பிழைநூறுஞ்சான்றோர்பொறுப்பர்கயவர்க்
கெழுநூறுநன்றிசெய்தொன்றுதீதாயி
னெழுநூறுந்தீதாய்விடும். * ௭ *

ஏட்டைப்பருவத்துமிற்பிறந்தார்செய்வன
மேட்டிடத்துஞ்செய்யார்முழுமக்கள்கோட்டை
வயிரஞ்செறிப்பினும்வாட்கண்ணாய்பன்றி
செயிர்வேழமாகுதலின்று. * ௮ *

இன்றாதுமிந்நிலையேயாதுமினிச்சிறிது
நின்றாதுமென்றுநினைத்திருந்தொன்றி
யுரையின்மகிழ்ந்துதம்முள்ளம்வேறாகி
மரையிலையின்மாய்ந்தார்பலர். * ௯ *

நீருட்பிறந்துநிறம்பசியதாயினு
மீரங்கிடையகத்தில்லாகுமோரு
நிறைப்பெருஞ்செல்வத்துநின்றக்கடைத்து
மறைப்பெருங்கல்லன்னாருடைத்து. * ௰ * ஆ ௩௱௩௰.

# பன்னெறி.

மழைதிளைக்குமாடமாய்மாண்பமைந்தகாப்பா
யிழைவிளக்குநின்றிமைப்பினென்னும்விழைதக்க
மாண்டமனையாளையில்லாதானில்லகங்
காண்டற்கரியதோர்காடு. * ௧ *

வழுக்கெனைத்துமில்லாதவாள்வாய்க்கிடந்து
மிழுக்கினைத்தாம்பெறாராயினிழுக்கெனைத்துஞ்
செய்குறாப்பாணிசிறிதேயச்சின்மொழியார்
கையுறாப்பாணிபெரிது. * ௨ *

ஏதியென்றெதிர்நிற்பாள்கூற்றஞ்சிறுகாலை
யட்டில்புகாதாளரும்பிணியட்டதனை
யுண்டியுதவாதாளில்வாழ்பேயிம்மூவர்
கொண்டானைக்கொல்லும்படை. * ௩ *

கடியெனக்கேட்டுங்கடியான்வெடிபட
வார்ப்பதுகேட்டுமதுதெளியான்போர்த்துமோ
ரிற்கொண்டினிதிருஉமேமுறுதலென்பவே
கற்கொண்டெறியுந்தவறு. * ௪ *

தலையேதவமுயன்றுவாழ்தலொருவர்க்
கிடையேயினியார்கட்டங்கல்கடையே
புணராதென்றெண்ணிப்பொருணசையாற்றம்மைம்
புணர்ரர்பின்சென்றதிலை. * ௫ *

பன்னொதி.

கல்லாக்கழிப்பர்தலையாயார்நல்லவை
துவ்வாக்கழிப்பரிடைகள்கடைக
ளினிதுண்ணேமாரப்பெறேம்யாமென்று
முனிவினாற்கண்பாடிலர். * ௬ *

செந்நெல்லாலாயசெழுமுளைமற்றுமச்
செந்நெல்லேயாகிவிளைதலாலந்நெல்

வயனிறையக்காய்க்கும்வளவயலூர

மகனறிவுதந்தையறிவு.

* எ *

உடைப்பெருஞ்செல்வருஞ்சான்றோருங்கேட்டுப்
புடைப்பெண்டிர்மக்களுங்கீழும்பெருகிக்
கடைக்சாறலக்கண்ணதாகிக்குடைக்கால்போற்
கீழ்மேலாய்நிற்குமுலகு. * அ *

இனியார்தந்நெஞ்சத்துநோயுரைப்பவந்நோய்
தணியாதவுள்ளமுடையார்மணிவான்றி
வீழுமருவிவிறன்மலைநன்னாட
வாழ்வின்வரைபாய்தனன்று. * கூ *

புதுப்புனலும்பூங்குழையார்நட்புமிரண்டும்
விதுப்பறநாடின்வேறல்லப்புதுப்புனலு
மாரியறவேயறுமேயவரன்பும்
வாரியறவேயறும். * ൰ * அ௨ காஎ௰.

பொதுமகளிர். ௪௲

---

விளக்கொளியும்வேசையர்நட்புமிரண்டுந்
துளக்கறநாடின்வேறல்லவிளக்கொளியு
நெய்யற்றகண்ணேயறுமேயவரன்புங்
கையற்றகண்ணேயறும்.

* ௧ *

அங்கோட்டகலல்குலாயிழையாணம்மொடு
செங்கோடுபாய்துமேயென்றாண்மற்செங்கோட்டின்

மேற்காணமின்மையான்மேவாதொழிந்தாளே
காற்கானேய்காட்டிக்கெழுந்து.

* ௨ *

அங்கண்விசும்பினமரர்தொழப்படுஞ்
செங்கண்மாலாயினுமாகமற்றங்கைக்
கொடுப்பதொன்றில்லாரைக்கொய்தளிரன்னார்
விடுப்பர்தங்கையாற்றொழுது.

* ௩ *

ஆணையினெஞ்சத்தணிநீலக்கண்ணார்க்குக்
காணையில்லாதார்கடுவனையார்களவே
செக்கூர்ந்துகொண்டானுஞ்செய்தபொருளுடையா
ரக்காரமன்றாவர்க்கு. * ௪ *

பாம்பித்கொழுந்தலைகாட்டியொருதலை
தேம்படுதெண்கயத்துமீன்காட்டுமாங்கு
மலங்கன்னசெய்கைமகளிர்தோள்சேர்வார்
விலங்கன்னவெள்ளறிவினர். * ௫ *

## பொதுமகளிர்.

பொத்தநூற்கல்லும்புணர்பிரியாவன்றிலும்போ
னித்தலுந்தம்மைப்பிரியலமென்றுரைத்த
பொற்றொடியும்போர்த்தகர்க்கோடாயினாள்னெஞ்சே
நிற்றியோபோதியோநீ. * ௧ *

ஆமாபோனக்கியவர்கைப்பொருள்கொண்டு
சேமாபோற்குப்புறூஉஞ்சில்லைக்கணன்பினை
யேமாந்தெமதென்றிருந்தார்பெறுபவே
தாமாம்பலரானகை. * ௭ *

ஏமாந்தபோழ்தினியார்போன்றின்னாய்த்
தாமார்ந்தபோதேதகர்க்கோடாமானோக்கிற்
றந்நெறிப்பெண்டிர்தடமுலைசேராரே
செந்நெறிச்சேர்துமென்பார்.

* ௮ *

ஊறுசெய்நெஞ்சந்தம்முள்ளடக்கியொண்ணுதலார்
தேறமொழிந்தமொழிகேட்டுத்தேறி
யெமரென்றுகொள்வாருங்கொள்பவேயார்க்குந்
தமரல்லர்தம்முடம்பினர். * ௯ *

உள்ளமொருவனுழையதாவொண்ணுதலார்
கள்ளத்தாற்செய்யுங்கருத்தெல்லாந்தெள்ளி
யறிந்தவிடத்துமறியாராம்பாவஞ்
செறிந்தவுடம்பினவர். * ௰ *

ஆ காஅம.

கற்புடைமகளிர். ( ௭௧

—◆—

அரும்பெற்றகற்பினயிராணியன்ன
பெரும்பெயர்ப்பெண்டிரெனினும்விரும்பிய
பெறுநசையாற்பின்னிற்பாரின்மையேபேணு
நறுநுதலாணன்மைத்துணை.

* க *

குடநீரட்டுண்ணுமிடுக்கட்பொழுதுங்
கடனீறவுண்ணுங்கேளிர்வரினுங்

கடனீர்மைகையாறக்கொள்ளுமடமொழி
மாதர்மனைமாட்சியாள்.

* உ *

நாலாறுமாறாய்நனிசிறிதாயெப்புறனு
மேலாறுமேனுறைசேரினுமேலாய
வல்லாளராய்வாழுமூர்தற்புகழுமாண்கற்பி
னில்லாளமர்ந்ததேயில்.

* ௫ *

கட்கினியாள்காதலன்காதல்வகைபுனைவா
ளுட்குடையாளூர்நாணியல்பினளுட்கி
யிடனறிந்தூடியினிதினுணரு
மடமொழிமாதராள்பெண். * ௬ *

ஏஞ்ஞான்றுமெங்கணவரெந்தோண்மேற்சேர்ந்தெழினு
மஞ்ஞான்றுகண்டேம்போனுணுதுமாலெஞ்ஞான்று
மென்னைகெழீஇயினர்கொல்லோபொருணசையாற்
பன்மார்புசேர்ந்தொழுகுவார். * ௭ *

கற்புடைமகளிர்.

உள்ளத்துணர்வுடையானோதியநூலற்றால்
வள்ளன்மைபூண்டான்கண்ணொண்பொருடெள்ளிய
வாண்மகன்கையிலயில்வாளனைத்தரோ
நாணுடையாள்பெற்றநலம்.

* ௯ *

ஞெருங்கொள்ளுஞ்செங்கொள்ளூந் துணிப்பதக்கென்
றொருங்கொப்பக்கொண்டாளுமோ றொருங்கொவ்வா
தன் னுதலார்த்தோய்ந் தவரைமார்பனீராடா.
தென்னையுந்தோயவரும்.

* எ *

கொடியவைகூறுதிபாணைநீகூறி
னடியையவிட்டொதுங்கிச்சென்றுதுடியி
னிடக்கண்ணனையம்யாமூர்க்கதுவ்
வலக்கண்ணனையார்க்குரை.

* அ *

சாய்ப்பறிக்கநீர்திகழுந் தண்வயலூரன்மீ
தீப்பறக்கதொந்தேனும்யானேமற்றீப்பறக்கத்
தாக்கிமுலைபொருததண்சாந்தணியகல
நோக்கியிருந்தேனும்யான். * க *

அரும்பவிழ்தாரினனெம்மருளுமென்று
பெரும்பொய்புனையாதிபாணகரும்பின்

சடைக்கண்ணையநாமூாற்கதனு
விடைக்கண்ணையார்க்குரை. * ௰ * ஆக. ௲௱௯௰.

---

பொருட்பான்முற்றிற்று.

காமநுதலியல். ( ௭௯ )

---

மூடங்காக்காற்பாயும்பசலைமற்றாடி
யுடங்காக்காலுப்பின்றாங்காமம்வயங்கோத

நில்லாத்திரையலைக்குநீள்கழித்தண்சேர்ப்ப
புல்லாப்புலப்பதோராறு. * ௧ *

தம்மமர்காதலர்தார்சூழணியகலம்
விம்மமுயங்குந்துணையில்லார்க்கிம்மெனப்
பெய்யவெழிலிமுழங்குந்திசையெல்லா
நெய்தலறைந்தன்னதீர்த்து. * ௨ *

கம்மஞ்செய்மாக்கள்கருவியொடுக்கிய
மம்மர்கொண்மாலைமலராய்ந்துபூத்தொடுப்பாள்
கைம்மாலையிட்டுக்கலுழ்ந்தாடுணையில்லார்க்
கிம்மாலையென்செய்வதென்று. * ௫ *

செல்சுடர்நோக்கிச்சிதரரிக்கண்கொண்டநீர்
மெல்விரலூழ்த்தெறியாவிம்மித்தன்மெல்விரலி
னுள்வைத்துநுங்குற்றமென்னுங்கொலத்தோதன்
றோள்வைத்தணைமேற்கிடந்து. * ௬ *

கண்கயலென்னுங்கருத்தினாற்காதலி
பின்சென்றதம்மசிறுசிரால்பின்சென்று
னூக்கியெழுந்துமெறிகல்லாவொண்புருவங்
கோட்டியவில்வாக்கறிந்து. * ௭ *

காமநுதலியல்.

அரக்காம்பனாறும்வாயம்மருங்கிற்கன்றே
பரற்கானமாற்றின கொல்லோவரக்கார்ந்த

•பஞ்சிகொண்டூட்டினும்மையெனப்பையெனவென்
றுஞ்சிப்பின்வாங்குமடி.

இலைக்கணைக்கொலியடங்குபுன்செக்கர்
மாலைப்பொழுதின்மணந்தார்பிரிவுள்ளி

மாலைபரிந்திட்டழுதாள்வனமுலைமேற்
கோலஞ்செய்சாந்தந்திமிர்ந்து.

கடக்கருங்கானத்துக்காளைபின்னாளை
நடக்கவும்வல்லையோவென்றிசுடர்த்தொடீஇ
பெற்றானொருவன்பெருங்குதிரையந்நிலையே
கற்றானஃதாறுமாறு.

முலைக்கண்ணுமுத்துமுழுமெய்யும்புல்லு
மிலக்கணம்யாதுமறியேன்கலைக்கணம்
வேங்கைவெரூஉநெறிசெலியபோலுமென்
பூம்பாவைசெய்தகுறி.

கண்மூன்றுடையானுங்காக்கையும்பையரவு
மென்னீன்றவாயும்பிழைத்ததென்பொன்னின்ற
கோங்கரும்பன்னமுலையாய்பொருள்வயிற்
பாங்கனார்சென்றநெறி. * ம *

காமத்துப்பான் முற்றிற்று.

———

நாலடிநானூறுமுற்றிற்றுமுற்றும்.